*மனித படைப்பு*

(முதல் மனிதர் ஆதாம்)

*மண்ணினால் படைக்கபட்ட மனிதன்*

*பைபிள் ;~*

7 தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான்.

ஆதியாகமம் 2:7

*குர்ஆன் ;~*

அல்லாஹ்விடத்தில் நிச்சயமாக ஈஸாவின் உதாரணம் ஆதமின் உதாரணம் போன்றதே; அவன் அவரை மண்ணிலிருந்து படைத்துப் பின் “குன்” (ஆகுக) எனக் கூறினான்; அவர் (மனிதர்) ஆகிவிட்டார்.

(அல்குர்ஆன் : 3:59)

*தேவ சாயலிலும் ரூபத்திலும் படைக்கபட்ட மனிதன்* ;~

*பைபிள் ; ~*

26 பின்பு தேவன்: நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக. அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப்



பறவைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊரும் சகலப் பிராணிகளையும் ஆளக்கடவர்கள் என்றார்.

ஆதியாகமம் 1:26

1 ஆதாமின் வம்சவரலாறு: தேவன் மனுஷனைச் சிருஷ்டித்த நாளிலே அவனைத் தேவசாயலாக உண்டாக்கினார்.

ஆதியாகமம் 5:1

6 மனுஷன் தேவசாயலில் உண்டாக்கப்பட்டபடியால், மனுஷனுடைய இரத்தத்தை எவன் சிந்துகிறானோ, அவனுடைய இரத்தம் மனுஷனாலே சிந்தப்படக்கடவது.

ஆதியாகமம் 9:6

இந்த வசனங்களிலிருந்து தேவன் மனிதனை தேவனுடைய சாயலிலும் ரூபத்திலும் படைத்தார் என்பதை புரிந்து கொள்ளலாம். தேவசாயல் என்பது தேவனுடைய மகிமையை காட்டுகிறது.

*குர்ஆன்* ;~

அல்லாஹ்வின் உருவில் படைக்கபட்ட மனிதன் ;~

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதமை அவருக்கே உரிய (அழகிய) உருவத்தில் படைத்தான். அப்போது அவர்களின் உயரம் அறுபது முழங்களாக இருந்தது. .............

ஸஹீஹ் புகாரி : 6227.

அத்தியாயம் : 79. பிரார்த்தனைகள்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும். ஏனெனில், அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதமைத் தனது உருவத்திலேயே படைத்தான்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 5093.

அத்தியாயம் : 45. பெற்றோருக்கு நன்மை செய்வதும், உறவைப் பேணி வாழ்வதும்

## *உயிரினங்களுக்கு பெயரிட்ட மனிதன்*

*பைபிள்* ;~

19 தேவனாகிய கர்த்தர் வெளியின் சகல வித மிருகங்களையும், ஆகாயத்தின் சகல விதப் பறவைகளையும் மண்ணினாலே உருவாக்கி, ஆதாம் அவைகளுக்கு என்ன பேரிடுவான் என்று பார்க்கும்படி அவைகளை அவனிடத்தில் கொண்டுவந்தார். அந்தந்த ஜீவஜந்துக்கு ஆதாம் எந்தெந்தப் பேரிட்டானோ அதுவே அதற்குப் பேராயிற்று.

ஆதியாகமம் 2:19

*குர்ஆன்* ;~

இன்னும், (இறைவன்) எல்லாப் (பொருட்களின்) பெயர்களையும் ஆதமுக்கு கற்றுக் கொடுத்தான்; ..,........

(அல்குர்ஆன் : 2:31)

“ஆதமே! அப் பொருட்களின் பெயர்களை அவர்களுக்கு விவரிப்பீராக!” என்று (இறைவன்) சொன்னான்; அவர் அப்பெயர்களை அவர்களுக்கு விவரித்தபோது “நிச்சயமாக நான் வானங்களிலும், பூமியிலும் மறைந்திருப்பவற்றை அறிவேன் என்றும், நீங்கள் வெளிப்படுத்துவதையும், நீங்கள் மறைத்துக் கொண்டிருப்பதையும் நான் அறிவேன் என்றும் உங்களிடம் நான் சொல்லவில்லையா?” என்று (இறைவன்) கூறினான்.

(அல்குர்ஆன் : 2:33)

## *முதல் பெண்ணை, அதாவது ஆதாமின் மனைவி ஏவைளின் ( ஹவ்வா ) படைப்பு*

ஆதாமிலிருந்து படைக்கபட்ட ஏவாள்

*பைபிள்* ;~

21 அப்பொழுது தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கு அயர்ந்த நித்திரையை வரப்பண்ணினார், அவன் நித்திரையடைந்தான். அவர் அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து, அந்த இடத்தைச் சதையினால் அடைத்தார்.

ஆதியாகமம் 2:21

22 தேவனாகிய கர்த்தர் தாம் மனுஷனில் எடுத்த விலா எலும்பை மனுஷியாக உருவாக்கி, அவளை மனுஷனிடத்தில் கொண்டுவந்தார்.

ஆதியாகமம் 2:22

23 அப்பொழுது ஆதாம்: இவள் என் எலும்பில் எலும்பும், என் மாம்சத்தில் மாம்சமுமாய் இருக்கிறாள். இவள் மனுஷனில் எடுக்கப்பட்டபடியினால் மனுஷி என்னப்படுவாள் என்றான்.

ஆதியாகமம் 2:23

*குர்ஆன்* ;~

ஆதமிலிருந்து படைக்கபட்ட ஹவ்வா

மனிதர்களே! உங்கள் இறைவனுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள், அவன் உங்கள் யாவரையும் ஒரே ஆத்மாவிலிருந்து படைத்தான், அவரிலிருந்தே அவர் மனைவியையும் படைத்தான்; பின்னர் இவ்விருவரிலிருந்து, அநேக ஆண்களையும் பெண்களையும் (வெளிப்படுத்தி உலகில்) பரவச் செய்தான்; .......

(அல்குர்ஆன் : 4:1)

அவனே, உங்களை ஒரே மனிதரிலிருந்து படைத்தான், அவருடன் கூடி (இணைந்து) வாழ்வதற்காக அவருடைய துணைவியை (அவரிலிருந்தே) படைத்தான் - ............

(அல்குர்ஆன் : 7:189)

அவன் உங்களை ஒரே மனிதரிலிருந்து படைத்தான்; பிறகு, அவரிலிருந்து அவருடைய மனைவியை ஆக்கினான்; .........

(அல்குர்ஆன் : 39:6)

## *ஆதாமிடம் சொன்ன உடன்படிக்கை*

*பைபிள்* ;~

16 தேவனாகிய கர்த்தர் மனுஷனை நோக்கி: நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம்.

ஆதியாகமம் 2:16

17 ஆனாலும் நன்மைதீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்கவேண்டாம். அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார்.

ஆதியாகமம் 2:17

2 ஸ்திரீ சர்ப்பத்தைப் பார்த்து: நாங்கள் தோட்டத்திலுள்ள விருட்சங்களின் கனிகளைப் புசிக்கலாம்.

ஆதியாகமம் 3:2

3 ஆனாலும், தோட்டத்தின் நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து தேவன்: நீங்கள் சாகாதபடிக்கு அதைப் புசிக்கவும் அதைத் தொடவும் வேண்டாம் என்று சொன்னார் என்றாள்.

ஆதியாகமம் 3:3

*குர்ஆன்* ;~

மேலும் நாம், “ஆதமே! நீரும் உம் மனைவியும் அச்சுவனபதியில் குடியிருங்கள். மேலும் நீங்கள் இருவரும் விரும்பியவாறு அதிலிருந்து தாராளமாக புசியுங்கள்; ஆனால் நீங்கள் இருவரும் இம்மரத்தை மட்டும் நெருங்க வேண்டாம்; (அப்படிச் செய்தீர்களானால்) நீங்கள் இருவரும் அக்கிரமக்காரர்களில் நின்றும் ஆகிவிடுவீர்கள்” என்று சொன்னோம்.

(அல்குர்ஆன் : 2:35)

(பின்பு இறைவன் ஆதமை நோக்கி:) “ஆதமே! நீரும், உம் மனைவியும் சுவர்க்கத்தில் குடியிருந்து, நீங்கள் இருவரும் உங்கள் விருப்பப்பிரகாரம் புசியுங்கள்; ஆனால் இந்த மரத்தை (மட்டும்) நெருங்காதீர்கள்; (அப்படிச் செய்தால்) நீங்கள் இருவரும் அநியாயம் செய்தவர்கள் ஆவீர்கள்” (என்று அல்லாஹ் கூறினான்).

(அல்குர்ஆன் : 7:19)

அப்பொழுது “ஆதமே! நிச்சயமாக இவன் உமக்கும், உம்முடைய மனைவிக்கும் பகைவனானான்; ஆதலால், உங்களிருவரையும் இச்சுவனபதியிலிருந்து திட்டமாக வெளியேற்ற (இடந்) தரவேண்டாம்; இன்றேல் நீர் பெரும் இன்னலுக்குள்ளாவீர்.

(அல்குர்ஆன் : 20:117)

## *உடன்படிக்கையை மீறிய ஆதம்*

*பைபிள்* ;~

விலக்கப்பட்ட விருட்சத்தின் கனியை புசித்த ஆதாமும் ஏவாளும்

6 அப்பொழுது ஸ்திரீயானவள், அந்த விருட்சம் புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியைத் தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாய் இருக்கிறது என்று கண்டு, அதின் கனியைப் பறித்து, புசித்து, தன் புருஷனுக்கும் கொடுத்தாள். அவனும் புசித்தான்.

ஆதியாகமம் 3:6

7 அப்பொழுது அவர்கள் இருவருடைய கண்களும் திறக்கப்பட்டது. அவர்கள் தாங்கள் நிர்வாணிகள் என்று அறிந்து, அத்தியிலைகளைத் தைத்து, தங்களுக்கு அரைக்கச்சைகளை உண்டுபண்ணினார்கள்.

ஆதியாகமம் 3:7

7 அவர்களோ ஆதாமைப் போல் உடன்படிக்கையை மீறி, அங்கே எனக்கு விரோதமாய் துரோகம்பண்ணினார்கள்.

ஓசியா 6

*குர்ஆன்* ;~

இவ்வாறு, அவன் அவ்விருவரையும் ஏமாற்றி, அவர்கள் (தங்கள் நிலையிலிருந்து) கீழே இறங்கும்படிச் செய்தான் - அவர்களிருவரும் அம்மரத்தினை (அம்மரத்தின் கனியை)ச் சுவைத்தபோது - அவர்களுடைய வெட்கத்தலங்கள் அவர்களுக்கு வெளியாயிற்று; அவர்கள் சுவனபதியின் இலைகளால் தங்களை மூடிக்கொள்ள முயன்றனர்; (அப்போது) அவர்களை அவர்கள் இறைவன் கூப்பிட்டு: “உங்களிருவரையும் அம்மரத்தை விட்டும் நான் தடுக்கவில்லையா? நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் என்று நான் உங்களுக்கு சொல்லவில்லையா?” என்று கேட்டான்.

(அல்குர்ஆன் : 7:22)

பின்னர் (இப்லீஸின் ஆசை வார்த்தைப்படி) அவ்விருவரும் அ(ம் மரத்)தினின்று புசித்தனர்; உடனே அவ்விருவரின் வெட்கத் தலங்களும் வெளியாயின; ஆகவே அவ்விருவரும் சுவர்க்கத்துச் சோலையின் இலையைக் கொண்டு அவற்றை மறைத்துக் கொள்ளலானார்கள்; இவ்வாறு ஆதம் தம்முடைய இறைவனுக்கு மாறு செய்து, அதனால் வழி பிசகி விட்டார்.



(அல்குர்ஆன் : 20:121)

முன்னர், நாம் ஆதமுக்கு நிச்சயமாக கட்டளையிட்டிருந்தோம்; ஆனால் (அதனை) அவர் மறந்து விட்டார்; (அக்கட்டளைபடி நடக்கும்) உறுதிப்பாட்டை நாம் அவரிடம் காணவில்லை.

(அல்குர்ஆன் : 20:115)

## *ஆதாமின் பாவம் மன்னிக்கபட்டதா*

*பைபிள்* ;~

11 அப்பொழுது அவர்: நீ நிர்வாணி என்று உனக்கு அறிவித்தவன் யார்? புசிக்கவேண்டாம் என்று நான் உனக்கு விலக்கின விருட்சத்தின் கனியைப் புசித்தாயோ என்றார்.

ஆதியாகமம் 3:11

12 அதற்கு ஆதாம்: என்னுடனே இருக்கும்படி தேவரீர் தந்த ஸ்திரீயானவள் அவ்விருட்சத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள், நான் புசித்தேன் என்றான்.

ஆதியாகமம் 3:12

இங்கே ஆதாமிடம் தேவன் "புசிக்க வேண்டாம் என்று சொன்ன புசித்தாயா" என்று கேட்கும்போது அதை ஆம் என்று ஒத்துக்கொண்டார். ஆனால் தனது பாவத்துக்கான மன்னிப்பை பெறாமல் அந்த பாவத்துக்கான காரணம் என்று தனது மனைவி தான் என்று மனைவியின் மீது பழியை போடுகிறார். தேவன் எதிர்பார்ப்பது என்னவென்றால் மனிதன் செய்யும் பாவத்தை ஒத்துகொள்ள வேண்டும் என்பதே.

13 நீயோ, உன் தேவனாகிய கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணி, பச்சையான சகல மரத்தின்கீழும் அந்நியரோடே சோரமார்க்கமாய் நடந்து, உன் அக்கிரமத்தையும், என் சத்தத்துக்குச் செவிகொடாமற்போனதையும் ஒத்துக்கொள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

எரேமியா 3

ஆதாம் தனது பாவத்தை ஒததுக்கொண்டு மன்னிப்பை பெறாமல் தனது பாவத்தை மறைத்தான் என்று பைபிள் சொல்கிறது.

33 நான் ஆதாமைப்போல என் மீறுதல்களை மூடி, என் அக்கிரமத்தை என் மடியிலே ஒளித்துவைத்தேனோ?

யோபு 31

தனது பாவத்தை ஒத்துகொள்ளாமல் மூடி மறைத்ததின் மூலம் பாவமன்னிப்பை பெற்றார் என்று சொல்ல முடியாது.

*குர்ஆன் ஹதீஸ்* ;~

## *ஆதம் மன்னிக்கபட்டாரா*

.ஆதாம் மனனிக்கபட்டதாக குர்ஆனிலிருந்து இரண்டு வசனங்களை மேற்கோள் காட்டுவார்கள்.முதலில் அந்த வசனங்களை பார்போம். (2;37, 20; 122)

பின்னர் ஆதம் தம் இறைவனிடமிருந்து சில வாக்குகளைக் கற்றுக் கொண்டார்; (இன்னும், அவற்றின் மூலமாக இறைவனிடம் மன்னிப்புக்கோரினார்;) எனவே இறைவன் அவரை மன்னித்தான்; நிச்சயமாக அவன் மிக மன்னிப்போனும், கருணையாளனும் ஆவான்.

(அல்குர்ஆன் : 2:37)

பின்னர் அவரது இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்து அவரை மன்னித்து நேர்வழியும் காட்டினான்.

(அல்குர்ஆன் : 20:122)

இந்த வசனங்களில் மன்னிக்கபட்டார் என்று தமிழில் உள்ளது. இதற்கு அந்த வசனங்களில் உள்ள அரபு வார்த்தை படாபா ( فَتَابَ) என்பது ஆகும். இதுக்கு "திரும்பினான்", "மன்னித்தான்" என்று இரண்டு அர்த்தங்கள் உள்ளன. அப்போ இந்த வசனத்தில் "படாபா" என்ற அரபு வார்த்தைக்கு என்ன அர்த்தம் கொடுக்க வேண்டும் என்று நாம் கவனிக்க வேண்டும்

மறுமை நாளில் மக்கள் வந்து எங்களுக்காக பரிந்துரை செய்யுங்கள் என்று சொல்கிறார்கள். அதற்கு ஆதம் சொல்வதை கவனியுங்கள்.

................. அதற்கு 'ஆதம்(அலை) அவர்கள் ('நான் செய்ததவற்றின் காரணத்தால்) என் இறைவன் என் மீது இன்று (கடும்) கோபம்கொண்டிருக்கிறான். இதற்கு முன் இதைப்போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் அவன் இதைப் போல் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை. (நான் நெருங்கக் கூடாத ஒரு) மரத்திலிருந்து (உண்ண வேண்டாமென்று) என்னை அவன் தடுத்தான். நான் அவனுக்கு மாறு செய்தேன். என்னையே நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது' என்று கூறிவிட்டு 'நீங்கள் வேறெவரிடமாவது சொல்லுங்கள். நீங்கள் (இறைத்தூதர்) நூஹிடம் செல்லுங்கள்' என்று சொல்வார்கள்.

............

ஸஹீஹ் புகாரி : 4712.

அத்தியாயம் : 65. திருக்குர்ஆன் விளக்கவுரை

உண்மையில் அல்லாஹ் ஆதமை மன்னித்திருந்தால் ஆதம் இவ்வாறு "சுவனத்தில்

இறைவனுக்கு மாறு செய்த பாவத்துக்காக கடும் கோபம் கொண்டு இருக்கிறான்" என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அப்போ ஆதமின் பாவம் மன்னிக்கபடவில்லை என்பதால் 2;37, 20;122 ஆகிய வசனங்களில் ......என்ற அரபு வார்த்தைக்கு மன்னித்தான் என்று அர்த்தம் கொடுக்க முடியாது. அப்போ அந்த வர்த்தைக்கு திரும்பினான. என்று தான் அர்த்தம் கொடுக்க முடியும்.

பின்னர் ஆதம் தம் இறைவனிடமிருந்து சில வாக்குகளைக் கற்றுக் கொண்டார்; (இன்னும், அவற்றின் மூலமாக இறைவனிடம் மன்னிப்புக்கோரினார்;) எனவே இறைவன் அவரிடம் திரும்பினார். நிச்சயமாக அவன் மிக மன்னிப்போனும், கருணையாளனும் ஆவான்.

(அல்குர்ஆன் : 2:37)

பின்னர் அவரது இறைவன் அவரைத் தேர்ந்தெடுத்து அவரிடம் திரும்பி நேர்வழி காட்டினான்.

(அல்குர்ஆன் : 20:122)

இந்த வசனங்களில் ஒரு சந்தேகம் எழும்பலாம், என்னவென்றால் ஆதம் பாவமன்னிப்பு கேட்டதினால் அவரிடம் திரும்பினார் என்றும், அவரை தேர்ந்தெடுத்து நேர்வழி காட்டினான் என்றும் உள்ளதே, இது ஆதமின் பாவம் மன்னிக்கபட்டால் தானே சாத்தியம் ?

அதாவது ஆதமை தெரிந்துகொண்டு நேர்வழி காட்டினான் என்றால் அவருக்கு நேர்வழி வரும்போது அதை பின்பற்றினால் நேர்வழி அடையலாம் என்பதே அர்த்தம். அல்லாஹ் ஆதமோடு சொல்வதை பாருங்கள்

(பின்பு, நாம் சொன்னோம் “நீங்கள் அனைவரும் இவ்விடத்தை விட்டும் இறங்கிவிடுங்கள்; என்னிடமிருந்து உங்களுக்கு நிச்சயமாக நல்வழி(யைக் காட்டும்

அறிவுரைகள்) வரும்போது, யார் என்னுடைய (அவ்) வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு எத்தகைய பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.”

(அல்குர்ஆன் : 2:38)

இந்த வசனத்திலிருந்து நாம் புரிந்து கொள்வது என்னவென்றால் அல்லாஹ் ஆதமுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டினான் என்றால் நேர்வழி வரும்போது அதை பின்பற்று என்று அர்த்தம். ஆனால் ஆதமுடைய பாவம் மன்னிக்கபடவில்லை, இதற்க்கு ஆதாரம் தான் புகார் 4712 ஆம் ஹதீஸில் ஆதம் சொல்வதை கவனித்தோம். இன்னும் ஆதம் மன்னிக்கபடவில்லை என்பதை தொடரந்து பார்க்க போகிறோம்.

## *தோட்டத்திலிருந்து ( சுவனத்திலிருந்து ) வெளியேற்றபட்ட ஆதாம்*

*பைபிள்* ;~

22 பின்பு தேவனாகிய கர்த்தர்: இதோ, மனுஷன் நன்மை தீமை அறியத்தக்கவனாய் நம்மில் ஒருவரைப்போல் ஆனான். இப்பொழுதும் அவன் தன் கையை நீட்டி ஜீவவிருட்சத்தின் கனியையும் பறித்து, புசித்து, என்றென்றைக்கும் உயிரோடிராதபடிக்குச் செய்யவேண்டும் என்று,

ஆதியாகமம் 3:22

23 அவன் எடுக்கப்பட்ட மண்ணைப் பண்படுத்த தேவனாகிய கர்த்தர் அவனை ஏதேன் தோட்டத்திலிருந்து அனுப்பிவிட்டார்.

ஆதியாகமம் 3:23

24 அவர் மனுஷனைத் துரத்திவிட்டு, ஜீவவிருட்சத்துக்குப் போம் வழியைக் காவல்செய்ய ஏதேன் தோட்டத்துக்குக் கிழக்கே கேருபீன்களையும்,

வீசிக்கொண்டிருக்கிற சுடரொளி பட்டயத்தையும் வைத்தார்.

ஆதியாகமம் 3:24

*குர்ஆன்* ;~

(பின்பு, நாம் சொன்னோம் "நீங்கள் அனைவரும் இவ்விடத்தை விட்டும் இறங்கிவிடுங்கள்; என்னிடமிருந்து உங்களுக்கு நிச்சயமாக நல்வழி(யைக் காட்டும் அறிவுரைகள்) வரும்போது, யார் என்னுடைய (அவ்) வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு எத்தகைய பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்."

(அல்குர்ஆன் : 2:38)

(அதற்கு இறைவன், "இதிலிருந்து) நீங்கள் இறங்குங்கள் - உங்களில் ஒருவர் மற்றவருக்குப் பகைவராயிருப்பீர்கள்; உங்களுக்கு பூமியில் தங்குமிடம் இருக்கிறது; அதில் ஒரு (குறிப்பிட்ட) காலம் வரை நீங்கள் சுகம் அனுபவித்தலும் உண்டு" என்று கூறினான்.

(அல்குர்ஆன் : 7:24)

"இதிலிருந்து நீங்கள் இருவரும் சேகரமாக இங்கிருந்து வெளியேறி விடுங்கள். உங்க(ள் சந்ததிக)ளில் சிலருக்குச் சிலர் பகைவர்களாகவே யிருப்பார்கள்; அப்பொழுது நிச்சயமாக என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும்; எவர் என்னுடைய நேர்வழியைப் பின் பற்றி நடக்கிறாரோ அவர் வழி தவறவும் மாட்டார், நற்பேறிழக்கவும் மாட்டார்.

(அல்குர்ஆன் : 20:123)

## *சுவனத்திலிருந்து வெளியேற்ற இடந்தரவேண்டாம் என்று முன்கூட்டியே எச்சரித்திருந்த அல்லாஹ்*

ஆதமின் பாவத்தின் நிமித்தமாக தான் மனிதன் பூமிக்கு வந்தான் என்று நாம் சொல்லும்போது "அப்படியல்ல, மனிதன் பூமிக்கு வரவேண்டும் என்பது மனிதனை படைக்கும் முன்பே தீர்மானிக்கப்பட்ட விஷயம்" என்று சொல்லி 2;30 ஆம் வசனத்தை மேற்கோள் காட்டுவார்கள்.

(நபியே) இன்னும், உம் இறைவன் வானவர்களை நோக்கி “நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை அமைக்கப் போகிறேன்” என்று கூறியபோது, அவர்கள் “(இறைவா!) நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி, இரத்தம் சிந்துவோரையா அமைக்கப்போகிறாய்? இன்னும் நாங்களோ உன் புகழ் ஓதியவர்களாக உன்னைத் துதித்து, உன் பரிசுத்ததைப் போற்றியவர்களாக இருக்கின்றோம் என்று கூறினார்கள்; அ(தற்கு இறை)வன் “நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நிச்சயமாக நான் அறிவேன்” எனக் கூறினான்.

(அல்குர்ஆன் : 2:30)

இந்த வசனத்தில் மனிதன் பூமியில் இருப்பதற்க்காக தான் படைக்கபட்டான் என்ற அர்த்தத்தில் உள்ளது. ஆனால் நாம் இங்கே புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் இந்த வசனத்தின் படி மனிதனை முதலில் பூமியில் படைக்க தான் அல்லாஹ் திட்டமிட்டிருந்தார். ஆனால் அதின் பிறகு அவரது நோக்கம் மாறி சுவனத்தில் வாழ வேண்டும் என்ற நோக்கில் மனிதனை படைத்தார். இதற்க்கான ஆதாரத்தை பார்க்கும்முன் அல்லாஹ் இப்படி தனது திட்டங்களை மாற்றுவானா என்று ஒரு வசனத்தின் மூலம் பார்ப்போம்,

ஏதேனும் ஒரு வசனத்தை நாம் மாற்றினால் அல்லது அதனை மறக்கச் செய்தால் அதைவிட சிறந்ததையோ அல்லது அது போன்றதையோ நாம் கொண்டுவருவோம். நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப்பொருட்களின் மீதும் சக்தியுள்ளவன் என்பதை நீர் அறியவில்லையா?

(அல்குர்ஆன் : 2:106)



இந்த வசனத்தில் அல்லாஹ் ஒரு வசனத்தை கொடுத்த பிறகு அதை ரத்து செய்து அதை விட சிறந்த வசனத்தை கொடுப்பாராம். அப்போ இதிலிருந்து தனது திட்டங்களையும் சட்டங்களையும் அல்லாஹ் மாற்றக்கூடியவர் தான் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது.

இனி அல்லாஹ் மனிதனிடம் "சுவனத்திலிருந்து வெளியேற இடந்தர வேண்டாம்" என்று சொன்ன ஆதாரங்களை பார்ப்போம்

அப்பொழுது “ஆதமே! நிச்சயமாக இவன் உமக்கும், உம்முடைய மனைவிக்கும் பகைவனானான்; ஆதலால், உங்களிருவரையும் இச்சுவனபதியிலிருந்து திட்டமாக வெளியேற்ற (இடந்) தரவேண்டாம்; இன்றேல் நீர் பெரும் இன்னலுக்குள்ளாவீர்.

(அல்குர்ஆன் : 20:117)

இந்த வசனத்தில் அல்லாஹ் ஆதமிடம் சொல்லும் போது "இச்சுவனபகுதியிலிருந்து வெளியேற இடந்தர வேண்டாம்" என்று அழுத்தமாக சொல்கிறார். இதை நாம் சொல்லும்போது "ஆதமை அல்லாஹ் வெளியேற்றும்வரை நீங்களாக வெளியேற்ற இடந்தர வேண்டாம்" என்று அல்லாஹ் சொல்வதாக புரிந்தகொள்ள வேண்டும் என்று சொல்கிறார்கள்., உண்மையில் அவர்கள் சொல்வது உண்மையாயிருந்தால் "நான் உங்களை வெளியேற்றும்வரையில் நீங்களாக வெளியேற இடந்தர வேண்டாம்" என்று அல்லாஹ் சொல்லி இருக்க வேண்டும். ஆனால் குர்ஆனில் அப்படியில்லை. அதினால் இந்த வாதம் குர்ஆனுக்கு முரணானது ஆகும்.

இஸ்லாமியர்கள் சொல்வது தவறு என்று நிரூபிக்க கூடிய கூடுதல் ஆதாரம் என்னவென்றால் ஆதமின் பாவம் மன்னிக்கபட்டதாக இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள். அப்படியானால் அவர்களை தொடர்ந்து சுவனத்தில் வைத்திருந்து அல்லாஹ் ஏற்க்கனவே எப்போ நாடியிருந்தானோ அப்போ தானே வெளியேற்றியிருக்க வேண்டும் ? ஆனால் அப்படி செய்யாமல் பாவம் செய்த போதே வெளியேற்றுகிறான். அப்போ இஸ்லாமியர்களின் வாதம் இங்கே தவறு என்று தான் என்பது தெளிவாகிறது.

இன்னும் கூடுதல் விஷயம் என்னவென்றால் ஆதமை வெளியேற செய்ததே



சைத்தான் என்று குர்ஆன் சொல்கிறது. ;

இதன்பின், ஷைத்தான் அவர்கள் இருவரையும் அதிலிருந்து வழி தவறச் செய்தான்; அவர்கள் இருவரும் இருந்த(சொர்க்கத்)திலிருந்து வெளியேறுமாறு செய்தான்; ..........

(அல்குர்ஆன் : 2:36)

இங்கே தெளிவாக சைத்தான் ஆதமை வழிதவற செய்து சுவனத்திலிந்து வெளியேற செய்தான் என்று உள்ளது..... அப்போ ஆதம் தவறு செய்யாமல் இருந்திருந்தால் ஆதம் சுவனத்திலேயே இருந்திருப்பார்.அவரது சந்ததிகள் உள்பட

## ,*ஆதமின் பாவத்துக்காக எல்லா மனிதர்களையும் வெளியேற்றிய அல்லாஹ்*

ஆதம் செய்த பாவத்துக்காக அவன் சந்ததிகள் எல்லோரையுமே அல்லாஹ் சுவனத்திலிருந்து வெளியேற்றினான். இந்த வசனத்தை பாருங்கள்.

(பின்பு, நாம் சொன்னோம் “நீங்கள் அனைவரும் இவ்விடத்தை விட்டும் இறங்கிவிடுங்கள்; என்னிடமிருந்து உங்களுக்கு நிச்சயமாக நல்வழி(யைக் காட்டும் அறிவுரைகள்) வரும்போது, யார் என்னுடைய (அவ்) வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு எத்தகைய பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.”

(அல்குர்ஆன் : 2:38)

இங்கே "நீங்கள் அனைவரும் சுவனத்திலிருந்து இறங்கி விடுங்கள்" என்று அல்லாஹ் சொல்கிறான். அதாவது இரண்டு பேரை பார்த்து "நீங்கள் அனைவரும்" என்று சொல்ல முடியாது. ஆக இது முழு உலகில் உள்ள மனிதர்களையும் சேர்த்து தான் குறிக்கிறது.  இதை பற்றி ஆதமே சொல்கிறார். அதாவது மக்கள் மறுமை



நாளில் அல்லாஹ்விடம் பரிந்துரை செய்யும்படி ஆதமிடம் சொல்லும் போது ஆதம் சொல்வதை கவனியுங்கள் ;

............ அவர்கள் ஆதம் (அலை) அவர்களிடம் சென்று, "எங்கள் தந்தையே! எங்களுக்காகச் சொர்க்கத்தின் வாசலைத் திறக்கும்படி கூறுங்கள்" என்பார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள் "உங்கள் தந்தை ஆதம் செய்த தவறுதானே உங்களைச் சொர்க்கத்திலிருந்தே வெளியேற்றியது! அ(வ்வாறு சொர்க்கத்தைத் திறக்குமாறு கூறுவ)தற்கு நான் உரியவன் அல்லன்............

ஸஹீஹ் முஸ்லிம் : 329.

அத்தியாயம் : 1. இறைநம்பிக்கை

இங்கே ஆதம் சொல்லும்போது "நான் செய்த தவறின் காரணமாக தானே நீங்கள் சுவனத்திலிருந்து வெளியேற்றபட்டீர்கள்" என்று சொல்கிறார்.. நாம் சொல்வதை ஆதமே சொல்லி விட்டார்.

ஆக ஆதமின் பாவத்தின் காரணமாக முழு மனுகுலமும் சுவனத்திலிருந்து வெளியேற்றபட்டார்கள்.

## *சுவனத்தின் நன்மைகளை இழந்த மனிதன்*

ஆதமும் அவனுடைய சந்ததிகளாகிய முழு மனிதர்களும் சுவனத்திலிருந்து வெளியேற்றபட்ட போது அந்த சுவனத்தின் அனுபவங்களையும் நன்மைகளையும் இழந்து போனார்கள். கீழே உள்ள வசனத்தை பாருங்கள்

அப்பொழுது “ஆதமே! நிச்சயமாக இவன் உமக்கும், உம்முடைய மனைவிக்கும் பகைவனானான்; ஆதலால், உங்களிருவரையும் இச்சுவனபதியிலிருந்து திட்டமாக வெளியேற்ற (இடந்) தரவேண்டாம்; இன்றேல் நீர் பெரும் இன்னலுக்குள்ளாவீர்.

(அல்குர்ஆன் : 20:117)

சைத்தான் ஆதமை வெளியேறும்படி செய்தால் அது மிகவும் துன்பமான விஷயம் என்று அதாவது துன்பத்துக்கு போகவேண்டியது வரும் என்று அல்லாஹ் சொல்கிறான். அப்போ ஆதம் சுவனத்தில் இருந்தது வரை அவனுக்கு துன்பம் இல்லாமலிருந்தது. இப்போது இந்த வசனத்தின் படி மனிதன் துன்பத்தில் காணபடுகிறான். இன்னும் அதே வசனங்களை தொடர்ந்து பாருங்கள் ;

“நிச்சயமாக நீர் இ(ச் சுவர்க்கத்)தில் பசியாகவோ நிர்வாணமாகவோ இருக்கமாட்டீர்.

(அல்குர்ஆன் : 20:118)

“இன்னும் இதில் நீர் தாகிக்கவும், வெயிலில் (கஷ்டப்)படவும் மாட்டீர் (என்று கூறினோம்).

(அல்குர்ஆன் : 20:119)

ஆதமிடம் "நீங்கள் இந்த சுவனத்தில் இருக்கும்போது பசியுடனோ, நிர்வாணமாகவோ இருக்கமாட்டாய்" என்றும் "நீர் தாகிக்கவும், வெயிலினால் கஷ்டபடவும் மாட்டாய்" என்று அல்லாஹ் சொல்கிறான். ஆனால் சைத்தான் ஆதமை சுவனத்திலிருந்து வெளியேற செய்த போது எல்லா மனிதர்களுக்கும் இந்த சுவனத்தின் நன்மைகள் இழந்துபோயின.  அவர்களின் வெட்கதலங்களும் வெளியாகின என்று வசனம் சொல்கிறது.

பின்னர் (இப்லீஸின் ஆசை வார்த்தைப்படி) அவ்விருவரும் அ(ம் மரத்)தினின்று புசித்தனர்; உடனே அவ்விருவரின் வெட்கத் தலங்களும் வெளியாயின; ஆகவே அவ்விருவரும் சுவர்க்கத்துச் சோலையின் இலையைக் கொண்டு அவற்றை மறைத்துக் கொள்ளலானார்கள்; இவ்வாறு ஆதம் தம்முடைய இறைவனுக்கு மாறு செய்து, அதனால் வழி பிசகி விட்டார்.

(அல்குர்ஆன் : 20:121)

# *பாவியாகவே பிறக்கும் மனிதர்கள்*

ஆதமின் பாவத்தின் காரணமாக சுவனத்திலிருந்து வெளியேற்றபட்டு தாழ்ந்த நிலையில் பாவம் செய்ய கூடிய பெலவீனர்களாக மாறினார்கள் .இதனால் ஆதமிலிருந்து பிறக்கும் எல்லோரும் பாவிகளாகவே இருக்கிறார்கள் என்று கிறிஸ்தவமும் இஸ்லாமும் சொல்கிறது

இதை குறித்து முதலாவது பைபிள் என்ன சொல்கிறது என்று பார்ப்போம் ;~

20 ஒரு பாவமும் செய்யாமல், நன்மையே செய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை.

பிரசங்கி 7:20

23 எல்லாரும் பாவஞ்செய்து, தேவமகிமையற்றவர்களாகி,

ரோமர் 3:23

46 பாவஞ்செய்யாத மனுஷன் இல்லையே, ..........

1 இராஜாக்கள் 8:46

12 இப்படியாக, ஒரே மனுஷனாலே பாவமும் பாவத்தினாலே மரணமும் உலகத்திலே பிரவேசித்ததுபோலவும், எல்லா மனுஷரும் பாவஞ்செய்தபடியால், மரணம் எல்லாருக்கும் வந்ததுபோலவும் இதுவுமாயிற்று.

ரோமர் 5

இந்த வசனங்களிலிருந்து ஆதாமின் பாவத்தின் நிமித்தமாக எல்லா மனிதர்களும்

பாவிகளாக இருக்கிறார்கள் என்பது மிக தெளிவாக புரிந்து கொள்ள முடிகிறது.

இதை பற்றி இஸ்லாம் சொல்வதை பார்போம் ;~

இஸ்லாமும் எல்லா மனிதர்களும் பாவிகள் என்று தான் சொல்கிறது. மனிதன் பிறக்கும்போதே பாவியாகவே பிறக்கிறான். இதற்க்கு ஒரு உதாரணத்தை பார்ப்போம். முஹம்மது சிறுவயதில் விளையாடிக்கொண்டு இருக்கும்போது வானவர் வந்து அவரது இருதயத்தை பிளந்து அவரில் இருந்த சைத்தானின் பங்கை எடுத்து விட்டு இருதயத்தை சம்சம் நீரினால் கழுவி மீண்டும் முஹம்மதுவின் உடலில் வைக்கிறார்.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது சிறு வயதில்) சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து நபியவர்களைப் பிடித்துப் படுக்கவைத்து,அவர்களின் நெஞ்சைத் திறந்து இருதயத்தை வெளியிலெடுத்தார்கள். ஓர் (சதைத்) துண்டை வெளியில் எடுத்து, "இதுதான் உம்மிடமிருந்த ஷைத்தானுக்குரிய பங்கு" என்று ஜிப்ரீல் கூறினார். பிறகு ஒரு தங்கத் தாம்பூலத்தில் இதயத்தை வைத்து ஸம்ஸம் நீரால் அதைக் கழுவினார். பின்னர் முன்பு இருந்த இடத்தில் இதயத்தைப் பொருத்தினார். (நபியவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த) அந்தச் சிறுவர்கள் நபியவர்களின் செவிலித் தாயிடம் ஓடிச் சென்று "முஹம்மத் கொல்லப்பட்டுவிட்டார்" என்று கூறினர். குடும்பத்தார் நபியவர்களை நோக்கி வந்தபோது (அச்சத்தால்) நபியவர்கள் நிறம் மாறிக் காணப்பட்டார்கள்.

அறிவிப்பாளர் அனஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் நெஞ்சில் ஊசியால் தைத்த அந்த அடையாளத்தை நான் பார்த்திருக்கிறேன்.

ஸஹீஹ் முஸ்லிம் : 261.

அத்தியாயம் : 1. இறைநம்பிக்கை

இது முஹம்மது குழந்தையாக இருந்தபோது நடைபெற்ற சம்பவம். இந்த சம்பவத்திலிருந்து குழந்தையாக இருக்கும்போதே சைத்தானின் பங்குடன் அல்லது பாவ தன்மையுடன் தான் பிறக்கிறார்கள் என்பதை இதிலிருந்து நாம் புரிந்து கொள்ள முடிகிறது. இப்போ சிறுவயதில் இது நடைபெற்ற பிறகு முஹம்மதுவுக்கு நபித்துவம் கிடைத்த பின்பு மிராஜ் பயணத்துக்கு போக கூடிய நேரத்தில் இதே சம்பவம் மீண்டும் நடக்கிறது.

நான் மக்காவில் இருந்தபோது என்னுடைய வீட்டு முகடு திறக்கப்பட்டது. (அது வழியாக) ஜிப்ரீல் (அலை) இறங்கி என்னுடைய நெஞ்சைப் பிளந்தார்கள். அதை ஸம்ஸம் தண்ணீரால் கழுவினார்கள். பின்னர் ஈமான் எனும் இறைநம்பிக்கை மற்றும் ஞானத்தினால் நிரப்பப்பட்ட ஒரு தங்கத் தட்டைக் கொண்டு வந்து என்னுடைய நெஞ்சில் கொட்டிவிட்டு, அதை மூடி கையைப் பிடித்து முதல் வானத்திற்கு என்னை ஏற்றிச் சென்றார்கள். ................

புகாரி 349 .

வானவர் மீண்டும் முஹம்மதுவின்! இருதயத்தை சம்சம் நீரினால் கழுவுவதை பார்க்கலாம். அப்போ மீண்டும் அவருக்குள் பாவத்தின் பங்கு வளர்ந்திருக்கிறது என்றே புரிந்து கொள்ள முடிகிறது. இதனால் தான் மீண்டும் அதை சம்சம் நீரினால் கழுவ வேண்டியதாகிறது. அப்போ எல்லா மனிதர்களும் பாவத்தின் பங்குடன் அல்லது பாவ வித்துடன் தான் பிறக்கிறார்கள். என்பதை இதன் மூலம் புரிந்து கொள்ளலாம். இதனால் தான் முஹம்மது சொல்லும்போது "ஆதமின் மக்கள் அனைவரும் பாவம் செய்யக்கூடியவர்கள்" என்று சொல்கிறார்.

"ஆதமின் மக்கள் அனைவரும் பாவம் செய்பவர்கள். பாவம் செய்பவர்களில் சிறந்தவர் மன்னிப்பு கேட்டு திருந்துபவர்களே"

இபின் மாஜா ஹதீஸ் 4251

. அப்போ எல்லா மனிதர்களும் பாவிகளாகவே பிறந்து பாவிகளாகவே இருக்கிறார்கள். இதனால் தான் முஹம்மது நபி ஒவ்வொரு நாளும் 100 முறை பாவமன்னிப்பு கோருபவராக இருந்தார். அதுமட்டுமின்றி மக்களிடமும் அவ்வாறு



பாவமன்னிப்பை கோரும்படியும் சொல்கிறார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மக்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். ஏனெனில், நான் ஒவ்வொரு நாளும் அவனிடம் நூறுமுறை பாவமன்னிப்புக் கோருகிறேன்..

.....

ஸஹீஹ் முஸ்லிம் : 5235.

அத்தியாயம் : 48. பிரார்த்தனைகள்

இங்கே நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான ஒரு விஷயம் என்னவென்றால் ஆதம் சுவனத்திலிருந்து பாவம் செய்யும் வரை பாவமன்னிப்பு கேட்டதாக இஸ்லாம் சொல்லவில்லை. ஆனால் ஆதம் எப்போது இறைவனுக்கு மாறு செய்தானோ அப்போ எப்படி பாவமன்னிப்பு கோரவேண்டும் என்று அல்லாஹ் கற்றுகொடுக்கிறதாக பார்க்கலாம்

பின்னர் ஆதம் தம் இறைவனிடமிருந்து சில வாக்குகளைக் கற்றுக் கொண்டார்; இன்னும், அவற்றின் மூலமாக இறைவனிடம் மன்னிப்புக்கோரினார்; .................

(அல்குர்ஆன் : 2:37)

ஆதம் ஏற்க்கனவே அதாவது பாவம் செய்யும்முன்பே பாவ மன்னிப்பு கோருபவனாக இருந்திருந்தால் இந்த இடத்தில் எப்படி பாவ மற்னிப்பு கோர வேண்டும் என்று இறைவன் கற்றுகொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் எப்போது ஆதம்  பாவம் செய்தானோ அப்போதிலிருந்து தான் பாவமன்னிப்பு கோருதல் அவசியமாகிறது என்பதையும் புரிந்துகொள்ள முடிகிறது.

ஆதமுடைய மக்கள் அனைவரும் பாவிகளாகவே இருக்கிறார்கள்.

இறைவன் மனிதனை பாவியாக படைக்காமல் செவ்வையாக அதாவது பரிசுத்தமுள்ளவனாக படைத்தார் என்று ஏற்க்கனவே பார்த்தோம். அதினால் தான்

"இறைவனுக்கு மாறு செய்யும்படி உன்னை மருடியது எது" என்று அல்லாஹ் கேட்கிறான்.ஆனால் ஆதாமின் வீழ்ச்சியின் நிமித்தமாக முழு மனிதர்களும் பாவிகளாக மாறினார்கள்.

இதை நாம் சொல்லும்போது அப்படி அல்ல என்றும் பிறக்கும் எல்லா குழந்தைகளும் இயற்கை மார்க்கத்தில் அதாவது பரிசுத்தமுள்ளவர்களாக தான் பிறக்கிறார்கள் என்று ஒரு ஹதீஸை மேற்கோள் காட்டுவார்கள். ( புகாரி 1359) ஆனால் மனிதன் பிறக்கும்போதே ஆதமின் பாவத்தின் காரணமாக பாவிகளாகவே பிறக்கிறான் என்று தெளிவாக பார்த்தோம். இவர்கள் மேற்கோள் காட்டும் ஹதீஸில் "பரிசுத்தமுள்ளவர்களாக பிறக்கிறார்கள்" என்று இல்லை, இஸ்லாத்தில் அதாவது முஸ்லிம்களாக பிறக்கிறார்கள் என்று தான் உள்ளது. அப்போ முஸ்லிம்களாக பிறந்தாலும் பாவிகளாக தான் பிறக்கிறார்கள் என்று தான் அர்த்தம். காரணம் மனிதன் பிறக்கும்போதே ஆதமின் பாவத்தின் காரணமாக பாவிகளாக பிறக்கிறார்கள் என்பதை தெளிவாக பாரத்தோம்.

( ஆனால் பிறக்கும் எல்லா குழந்தைகளும் முஸ்லிம்களாக பிறக்கவில்லை என்பதை தொடர்ந்து பார்ப்போம்)

## *செவ்வையாக படைக்கபட்டும் தாழ்ந்த நிலையை அடைந்த மனிதன்*

**இது**வரை இறைவன் மனிதனை சுவனத்தில் தான் படைத்தான் என்றும் அவனை அங்கிருந்து வெளியேற்றுவது இறைவனின் நோக்கம் இல்லை என்றும், ஆனால் மனிதன் கடவுளின் உடன்படிக்கையை மீறி பாவம் செய்தபடியால் எல்லா மனிதர்களும் சுவனத்திலிருந்தும் அதனுடைய நன்மைகளிலிருந்தும் வெளியேற்றபட்டார்கள் என்றும் அவ்வாறு வெளியேற்றபட்ட மனிதர்கள் எல்லோரும் பாவிகளாக மாறினார்கள் என்மு நாம் பார்த்தோம். இதை குறித்து நுணுக்கமான முறையில் சுருக்கமாக பைபிளும் குர்ஆனும் பேசுகிறது,

முதலாவது பைபிள் சொல்வதை பாருங்கள். ;~

29 இதோ, தேவன் மனுஷனைச் செம்மையானவனாக உண்டாக்கினார், அவர்களோ அநேக உபாயதந்திரங்களைத் தேடிக்கொண்டார்கள், இதைமாத்திரம் கண்டேன்.

பிரசங்கி 7:29

இங்கே தேவன் மனிதனை படைத்த போதும் மனிதன் தன்னுடைய செயலின் காரணமாக அநேக உபாயதந்திரங்களை தேடிகொள்கிறான் என்று சொல்கிறது. அதாவது ஆதாமை தேவன் படைக்கும்போது பாவியாக படைக்கவில்லை. செவ்வையாக பரிசுத்தமுள்ளவனாக தான் படைத்தார். ஆனால் அவனுடைய வீழ்ச்சியின் மூலம் எல்லா மனிதர்களும் பாவிகளாக மாற்றினார்கள் என்று பைபிள் சொல்கிறது.

12 இப்படியாக, ஒரே மனுஷனாலே பாவமும் பாவத்தினாலே மரணமும் உலகத்திலே பிரவேசித்ததுபோலவும், எல்லா மனுஷரும் பாவஞ்செய்தபடியால், மரணம் எல்லாருக்கும் வந்ததுபோலவும் இதுவுமாயிற்று.

ரோமர் 5

*இதைப்பற்றி குர்ஆன் என்ன சொல்கிறது என்று பார்ப்போம்* ;~

திடமாக, நாம் மனிதனை மிகவும் அழகிய அமைப்பில் படைத்தோம்.

(அல்குர்ஆன் : 95:4)

பின்னர் (அவன் செயல்களின் காரணமாக) அவனைத் தாழ்ந்தவர்களில், மிக்க தாழ்ந்தவனாக்கினோம்.



(அல்குர்ஆன் : 95:5)

அல்லாஹ் மனிதனை படைக்கும்போது அழகிய அமைப்பில் படைத்தான் என்றும் ஆனால் அவனுடைய செயலின் காரணமாக தாழ்ந்தவனிலும் தாழ்ந்தவறாக மாறுகிறான் என்று இந்த வசனம் சொல்கிறது. இன்னும் 15;29 ஆம் வசனத்தில் மனிதனை "செவ்வையாக" படைத்ததாக அல்லாஹ் சொல்கிறான்.

அவரை நான் செவ்வையாக உருவாக்கி, ” ...........

(அல்குர்ஆன் : 15:29)

அப்போ ஆதமை அல்லாஹ் படைக்கும் போது செவ்வையாக பரிசுத்தமுள்ளவனாகவே படைத்தார் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது. மனிதனை பார்த்து அல்லாஹ் கேட்கும் கேள்வியை பாருங்கள் ;

மனிதனே! கொடையாளனான சங்கை மிக்க உன் இறைவனுக்கு மாறு செய்யும்படி உன்னை மருட்டி விட்டது எது?

(அல்குர்ஆன் : 82:6)

அவன்தான் உன்னைப்படைத்து, உன்னை ஒழுங்குபடுத்தி; உன்னைச் செவ்வையாக்கினான்.

(அல்குர்ஆன் : 82:7)

மனிதனிடம் "உன் இறைவனுக்கு மாறு செய்யும்படி உன்னை மருடியது எது" என்று அல்லாஹ் கேட்கிறான். தொடர்ந்து சொல்லும்போது செவ்வையாக தான் படைத்ததாக அல்லாஹ் சொல்கிறான். அப்போ இந்த 82;6 ல் உள்ள கேள்வியை அல்லாஹ் கேட்கிறான் என்றால் நிச்சயமாக பாவம் செய்ய கூடிய பெலவீனமான

படைப்பாக மனிதனை அல்லாஹ் படைத்திருக்க முடியாது. பாவம் செய்யகூடிய பெலவீனமான படைப்பாக படைத்துவிட்டு உன்ன பாவம் செய்யும்படி மருடியது என்று கேட்வே முடியாது. அப்படி கேட்டால் ஒருவனை கெட்டி போட்டு விட்டு உன்னை நடக்க விடாமல் தடுப்பது எது என்று கேட்பது மாதிரி முட்டாள்தனமான மாறும். அப்போ அல்லாஹ் மனிதனை பாவ இயல்புடன் படைக்கவில்லை. ஆனால் 4;28 ஆம் வசனத்தில் மனிதன் பெலவீனமானவனாக படைக்கப்பட்டு இருக்கிறான் என்று சொல்கிறது.

அன்றியும், அல்லாஹ் (தன்னுடைய சட்டங்களை) உங்களுக்கு இலேசாக்கவே விரும்புகிறான்; ஏனெனில் மனிதன் பலஹீனமானவனாகவே படைக்கப்பட்டுள்ளான்.

(அல்குர்ஆன் : 4:28)

அப்போ இந்த வசனத்தை நாம் எப்படி புரிந்து கொள்ள வேண்டும் என்றால் ஆதமை படைக்கும்போது பாவ இயல்பு இல்லாதவனாக தான் அல்லாஹ் படைத்தான் என்றும் ஆனால் அவனது செயலின் காரணமாக அவனும் அவனுடைய சந்ததிகளும் தாழ்ந்தவர்களாக பெலவீனமான படைப்பாக மாற்றபட்டார்கள் என்பதே இதன் அர்த்தம் .

இவ்வாறு ஆதமின் வீழ்ச்சியிலிருந்து பிறக்கபட்ட மனிதனுடைய இயல்பு அதாவது ஜென்ம சுபாவம் எப்படிபட்டது என்று குர்ஆன் கூறுவதை பார்ப்போம்.

............ நிச்சயமாக மனிதன் மிக்க அநியாயக்காரனாகவும், மிக்க நன்றி கெட்டவனாகவும் இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 14:34)

...........இன்னும், மனிதன் மகா நன்றி மறப்பவனாகவே இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 17:67)

நிச்சயமாக, மனிதன் தன் இறைவனுக்கு நன்றி கெட்டவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 100:6)

........... நிச்சயமாக மனிதன் பகிரங்கமான பெரும் நிராகரிப்பவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 43:15)

நிச்சயமாக மனிதன் அவசரக்காரனாகவே படைக்கப்பட்டிருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 70:19)

அவனை ஒரு கெடுதி தொட்டுவிட்டால் பதறுகிறான்;

(அல்குர்ஆன் : 70:20)

அவன் மனிதனை இந்திரியத்துளியினால் படைத்தான்; அப்படியிருந்தும் மனிதன் பகிரங்கமான எதிரியாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 16:4)

மனிதன், நன்மைக்காக பிரார்த்தனை செய்வது போலவே (சில சமயம்) தீமைக்காகவும் பிரார்த்திக்கின்றான்; (ஏனென்றால்) மனிதன் அவசரக்காரனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 17:11)

மனிதன் அவசரக்காரனாகவே படைக்கப்பட்டிருக்கின்றான்; …………

(அல்குர்ஆன் : 21:37)

“…………… - மேலும், மனிதன் உலோபியாகவே இருக்கின்றான்” என்று (நபியே!) நீர் கூறும்.

(அல்குர்ஆன் : 17:100)

…………மனிதன் அதிகமாகத் தர்க்கம் செய்பவனாகவே இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 18:54)

…………. நிச்சயமாக மனிதன் நன்றிகெட்டவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் : 22:66)

“அல்லது, இழிவானவரும், தெளிவாகப் பேச இயலாதவருமாகிய இவரை விட நான் மேலானவன் இல்லையா?

(அல்குர்ஆன் : 43:52)

எனினும் நிச்சயமாக மனிதன் வரம்பு மீறுகிறான்.

(அல்குர்ஆன் : 96:6)

அப்போ முதல் மனிதனாகிய ஆதமை அல்லாஹ் செவ்வையாக அழகிய முறையில் குறைபாடு இல்லாதவனாக படைத்தார். ஆனால் அவனுடைய அவனுடைய வீழ்ச்சியின் மூலம் மனிதர்கள் பாவம் செய்யகூடிய பெலவீனர்களாக, அவசரக்காரனாக, அநியாயம் செய்யகூடியவனாக, தர்க்கம் செய்ய கூடியவனாக, நன்றி கெட்டவனாக மாறினான் என்று குர்ஆன் சொல்கிறது.

இதை நாம் கூறும் போது அப்படியல்ல என்றும் ஆதமை அல்லாஹ் படைக்கும் போதே பெலவீனனாக தான் படைத்தான் என்று சொல்லி முஸ்லீம் 5089 ஆம் ஹதீஸை மேற்கோள் காட்டுவார்கள். முதலில் அந்த ஹதீஸை பார்ப்போம்.;

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதம் (அலை) அவர்களைச் சொர்க்கத்தில் (களிமண்ணால்) படைத்து, தான் நாடிய காலம்வரை அப்படியே விட்டுவிட்டான். இப்லீஸ் அதைச் சுற்றி வந்து அது என்னவென்று உற்றுப் பார்க்கலானான். வயிறு உள்ளதாக அதைக் கண்டபோது "தன்னைத்தானே கட்டுப்படுத்திக்கொள்ள முடியாத (கட்டுப்பாடற்ற) படைப்பாகவே அது படைக்கப்பட்டுள்ளது" என அவன் அறிந்துகொண்டான்.

இதை அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

-  மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 5089.

அத்தியாயம் : 45. பெற்றோருக்கு நன்மை செய்வதும், உறவைப் பேணி வாழ்வதும்

இங்கே ஆதமை அல்லாஹ் படைத்து உயிர் கொடுப்பதற்க்கு முன்பு இப்லீஸ் அதை ( ஆதமை) பார்த்த போது ஆதமின் வயிற்றை பார்த்து தான் "தன்னை தானே கட்டுபடுத்தி கொள்ள முடியாத படைப்பு" என்று புரிந்து கொள்கிறான்.  இதனுடைய அர்த்தம் என்னவென்றால் பசியை கட்டுபடுத்தி கொள்ள முடியாத படைப்பு என்று அர்த்தம். மனிதனுக்கு பசி, தூக்கம் ஆகியவை கட்டுபடுத்த முடியாதவை ஆகும். ஆதமை இப்லீஸ் முழுமையாக பார்த்தாலும் ஆதமின் வயிற்றை பார்த்து இவ்வாறு புரிந்து கொண்டதால் இது மனிதனின் பசியை தான் குறிக்கிறது. அல்லாமல் ஆதமை படைக்கும்போதே பாவம் செய்யும் பெலவீனத்துடன் படைத்திருந்தால் "சங்கைமிக்க உன் இறைவனுக்கு மாறு செய்யும்படி உன்னை மருடியது எது"(82;6) என்று அல்லாஹ்வுக்கு கேட்கவே முடியாது. அதினால் அதினால் இந்த ஹதீஸுக்கு இது  தான் அர்த்தம்.

ஆக அல்லாஹ் முதல் மனிதனாகிய ஆதமை செவ்வையாக பரிசுத்தமாக படைத்த நிலையிலிருந்து ஆதம் பாவம் செய்து வீழ்ச்சியடைந்து போன போது முழு மனிதர்களும் பாவம் செய்ய கூடிய பெலவீனர்களாக தாழ்ந்த நிலையில் ஆனார்கள்.

## *மனித இரத்த நாளங்களில் சைத்தான்*

ஆதமின் பாவத்தின் நிமித்தமாக எல்லா மனிதர்களும் பாவிகளாக மாற்றபட்டனர் என்றும் பிறக்கும் எல்லோருமே பாவத்தில் பிறக்கிறார்கள் என்றும் அதனால் செவ்வையாக படைக்கபட்ட மனிதன் ஆதமின் பாவத்தின் காரணமாக தாழ்ந்தவனிலும் தாழ்ந்தவனாக மாறினான் என்று நாம் பார்த்தோம்.

இவ்வாறு பாவியாக பிறக்கும் ஒவ்வொரு மனிதனுடைய இரத்த நாளங்களிலும் சைத்தான் ஓடுகிறான் என்று முஹம்மது சொல்கிறார்.



........................நபி(ஸல்) அவர்கள் சொன்ன வார்த்தை அவர்கள் இருவருக்கும் பளுவாக இருந்தது. நபி(ஸல்) அவர்கள் 'ஷைத்தான் ஆதமின் மகனின் (மனிதனின்) இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் (சந்தேகம் அல்லது தீய எண்ணம் எதையாவது) அவன் போட்டு விடுவானோ என்று நான் அஞ்சினேன்' என்றார்கள். 254

ஸஹீஹ் புகாரி : 6219.

அத்தியாயம் : 78. நற்பண்புகள்

..........................நபி(ஸல்) அவர்கள், 'மனிதனின் இரத்த நாளங்களில் எல்லாம் ஷைத்தான் ஊடுருவியுள்ளான்' என்றார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.36

ஸஹீஹ் புகாரி : 7171.

அத்தியாயம் : 93. நீதியும் நிர்வாகமும்

பாவியாக பிறக்கும் மனிதர்களின் ரத்தத்தில் சைத்தான் ஊடுருவியுள்ளதாக இங்கே முஹம்மது சொல்கிறார். நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால் ஆதமை அல்லாஹ் படைக்கும் போது ஆதமுக்கு இப்படிபட்ட நிலமை இல்லை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஆதமின் பாவத்தின் காரணமாக எல்லா மனிதர்களும் பாவிகளாக மாற்ற பட்ட பிறகு தான் இவ்வாறு நடக்கிறது.

## *எல்லா பெண்களுக்கும் கணவனை ஏமாற்ற காரணமான ஹவ்வா*

நாம் ஆதமின் பாவத்தின் நிமித்தமாக தான் பூமியில் பாவிகளாக வந்தோம் என்பதை மிக தெளிவாக பார்த்தோம். இதை உறுதிபடுத்தும் விதத்தில் முஹம்மது ஒரு விஷயத்தை சொல்லி இருக்கிறார். அது என்னவென்றால் இந்த உலகத்தில் பெண்கள் தங்கள் கணவர்களை ஏமாற்ற காரணம் ஹவ்வாயாம். அந்த ஹதீஸை பார்ப்போம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்:

ஹவ்வா (ஆதிமனிதர் ஆதம் (அலை) அவர்களின் துணைவி ஏவாள்) இருந்திறாவிட்டால், எந்தப் பெண்ணும் தன் கணவனை ஒருபோதும் ஏமாற்றியிருக்கமாட்டாள்

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 2916.

அத்தியாயம் : 17. பால்குடி (சட்டம்)

அதாவது ஹவ்வா தனது கணவன் ஆதமை ஏமாற்றிய படியால் தான் பெண்கள் தங்கள் கணவர்களை ஏமாற்றுகிறார்களாம். இங்கே கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால் ஹவ்வா தனது கணவனை ஏமாற்றும்போது மனிதர்கள் யாருமே பிறக்கவில்லை, ஆனால் ஹவ்வா தனது கணவனை ஏமாற்றிய படியால் தான் இன்றைக்கு பெண்கள் தங்கள் கணவர்களை ஏமாற்றுகிறார்கள். அப்படியானால் இதிலிருந்து நாம் புரிந்து கொள்ள கூடிய முக்கியமான விஷயம் என்னவென்றால் ஹவ்வா ஆரம்பித்த அந்த ஏமாற்றுதல் என்னும் பாவ சுபாவம் எல்லோரையும் பின்தொடருகிறது என்பதே. இதே போல சைத்தானின் பேச்சை கேட்டு சைத்தானுக்கு இடம்கொடுத்து இறைவனுக்கு மாறு செய்த ஆதமின் பாவம் இன்றைக்கும் மனிதர்களை தொடர்ந்து கொண்டே இருக்கிறது என்று அர்த்தம்.

## *எல்லா மனிதர்களின் பாவத்தில் ஒரு பங்கை சுமக்கும் ஆதம்*

ஆதமின் பாவத்தின் நிமித்தமாக பூமியில் உள்ள எல்லோரும் பாவிகளாக இருக்கிறார்கள் என்பதை தெளிவாக பார்த்தோம். ஆதம் செய்த பாவம் என்பது "இறைவனுக்கு மாறு செய்தல்" , "சைத்தானுக்கு இடம்கொடுத்தல்" . இந்த இரண்டு பாவங்களையும் அடிப்படையாக வைத்து தான் உலகில் உள்ள எல்லா பாவங்களும் உள்ளது. ஆக முழு உலகத்து மனிதர்களும் பாவிகளாக காரணம் ஆதமே. அப்படியானால் முழு உலக மனிதர்களும் வழிகெட, அல்லது பாவிகளாக மாற காரணமாக இருந்தவர் ஆதம். இதை குறித்து விரிவாக பார்க்கும் முன் ஆதமை பற்றி சில குறிப்புகளை பார்ப்போம்.

இந்த ஆதமை இஸ்லாமியர்கள் நபி என்று நம்புகிறார்கள்.ஆனால் அது தவறாக செய்தி ஆகும்.

நூஹுக்கும், அவருக்குப் பின் வந்த நபிமார்களுக்கும் தூதுச் செய்தி அறிவித்தது போல் (முஹம்மதே!) உமக்கும் நாம் தூதுச்செய்தி அறிவித்தோம்.

திருக்குர்ஆன் 4:163

உண்மையில் ஆதம் நபியாக இருந்தால் "ஆதமுக்கும் அவருக்கு பின் வந்த நபிமார்களுக்கும் செய்தி அறிவித்தது போல" என்று இந்த வசனம் வந்திருக்க வேண்டும். ஆனால் ஆதம் நபி இல்லாதபடியால் தான் இந்த வசனத்தில் நூஹை அல்லாஹ் முதல் நபியாக குறிப்பிடுகிறான். மறுமை நாளில் நூஹிடம் மக்கள் பரிந்துரை செய்ய போகும் போது நூஹை பார்த்து மக்கள் சொல்வதை பாருங்கள்

நூஹே ! நீர் பூமியில் உள்ளவர்களுக்கு முதல் தூதர் ஆவீர்........

(புகாரி 3340)

.......மக்கள் நூஹ் (அலை) அவர்களிடம், "நூஹே! நீங்கள் பூமிக்கு முதல் ரசூல் ஆவீர்கள்"........(முஸ்லிம் 327)

.........நூஹே ! நீர் பூமியில் உள்ளவர்களுக்கு அல்லாஹ் அனுப்பிய முதல் தூதர்



ஆவீர்....... (புகாரி 4476)

.........பூமியில் உள்ளவர்களுக்கு அல்லாஹ் அனுப்பிய முதல் நபி (நூஹ்) ஆவார்............ (7440)

ஆக ஆதம் நபி இல்லை என்பதை தெளிவாக பார்த்தோம். இதற்கு முரணாக ஆதம் ஒரு நபி என்று ஏதாவது ஆதாரம் வந்தால் அது முரண்பாடாகவே பார்க்க முடியும்.

ஆதம் சுவனத்திலிருந்து வெளியேற்றபட்டு பூமியில் வந்த போது அல்லாஹ் ஆதம் தம்பதியினருக்கு குழந்தை கொடுத்த போது ஆதம் தம்பதியினர் இணைவைப்பாளர்களாக மாறினார்கள்.

அவனே, உங்களை ஒரே மனிதரிலிருந்து படைத்தான், அவருடன் கூடி (இணைந்து) வாழ்வதற்காக அவருடைய துணைவியை (அவரிலிருந்தே) படைத்தான் - அவன் அவளை நெருங்கிய போது அவள் இலேசான கர்ப்பவதியானாள்; பின்பு அதனைச் சுமந்து நடமாடிக் கொண்டிருந்தாள்; பின்பு அது பளுவாகவே, அவர்களிருவரும் தம்மிருவரின் இறைவனிடம், "(இறைவனே!) எங்களுக்கு நீ நல்ல (சந்ததியைக்) கொடுத்தால், நிச்சயமாக நாங்கள் இருவரும் நன்றியுள்ளவர்களாக இருப்போம்" என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர்.

(அல்குர்ஆன் : 7:189)

அவர்களுக்கு (அவர்கள் விருப்பப்படி) நல்ல குழந்தையை அவன் கொடுத்தவுடன், அவர்களுக்கு அவன் கொடுத்ததில் அவ்விருவரும் அவனுக்கு இணைகளைக் கற்பிக்கின்றனர் - இவர்கள் இணை வைப்பதை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன்."

(அல்குர்ஆன் : 7:190)

ஆக ஆதம் ஒரு நபி கிடையாது, அவர் ஒரு இணைவைப்பாளராக இருந்தவர்.



இவைகளை இப்போது தெரிந்துகொள்ள காரணம் என்னவென்றால் ஆதம் ஒரு நபி என்பதால் ஆதம் மீது மனிதர்களின் பாவத்தை அல்லாஹ் சுமத்த மாட்டான் என்று இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். ஆனால் அது தவறு என்று புரிவதற்க்காக தான் பார்த்தோம். இந்த தகவல்களை மனதில் வைத்து கொண்டு ஆதம் மீது பாவம் சுமத்தபடுதலை பற்றி பார்ப்போம்.

இந்த ஹதீஸை பாருங்கள்

.

................யார் இஸ்லாத்தில் (அதன் அடிப்படைக்கு எதிரான) ஒரு தீயநடைமுறையை உருவாக்கி விட, அவருக்குப் பிறகும் அந்த நடைமுறை செயல்படுத்தப்படுகிறதோ அவருக்குப்பின் அதன்படி செயல்படுகிறவர்களின் பாவம் போன்றது அவருக்கு உண்டு. அ(தன்படி செயல்பட்ட)வர்களின் பாவத்திலிருந்து எதுவும் குறையாது..............

.

ஸஹீஹ் முஸ்லிம் : 5193.

அத்தியாயம் : 47. கல்வி

அதாவது இஸ்லாத்துக்கு முரணாக ஒரு தீய நடைமுறையை ஒருவர் உருவாக்கி விட்ட பிறகு அந்த தீய நடைமுறையை யாரெல்லாம் செய்தாலும் அவர்களின் பாவத்தின் ஒரு பங்கு இந்த தீய நடைமுறையை உருவாக்கியவருக்கு உண்டு என்று இந்த ஹதீஸ் சொல்கிறது. அப்படியானால் சைத்தானுக்கு இடம்கொடுத்து அவனது பேச்சை கேட்டு இறைவனுக்கு மாறு செய்தலை ஆரம்பித்த ஆதமின் மீது இந்த உலகில் காணப்படும் எல்லா மனிதர்களும் செய்த பாவங்களின் ஒரு பங்கு சேரும். காரணம் எல்லா பாவங்களுமே சைத்தானுக்கு இடம்கொடுத்து இறைவனுக்கு மாறு செய்வதில் அடங்குகிறது. அதாவது ஏற்க்கனவே பெண்கள் எல்லோரும் தங்கள் கணவனை ஏமற்ற காரணம் ஹவ்வா தான் என்று நாம் பார்த்தோம் அல்லவா! அது போல தான் உலக மனிதர்கள் வழிகெட்டு பாவிகளாக காரணம் ஆதம் தான்... ஆகையால் உலகத்தில் உள்ள ஒவ்வொரு மனிதர்களின் பாவத்தின் ஒரு பங்கு வீதம் ஆதமுக்கும் வருகிறது. இதற்கு உதாரணமாக ஆதமின் மகன் தான் முதலில் கொலை என்னும் பாவத்தை செய்தான். ஆகையால் உலகில் யாரெல்லாம் கொலை செய்கிறார்களோ அவர்களின் பாவத்தின் ஒரு பங்கை ஆதமின் மகன்



சுமப்பான் என்று முஹம்மது சொல்கிறார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உலகில்) ஒரு மனிதன் அநியாயமாகக் கொல்லப்படும்போது அந்தக் கொலையின் பாவத்தில் ஆதம்(அலை) அவர்களின் முதல் மகனுக்கும் ஒரு பங்கு இருக்கவே செய்யும். ஏனெனில், அவர்தான் முதன் முதலாக கொலை செய்து (ஒரு முன் மாதிரியை ஏற்படுத்தி) அதை வழக்கில் கொண்டு வந்தவர்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3335.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்.

இந்த செய்தி நாம் மேல சொன்ன விஷயத்துக்கு ஆதாரமாக உள்ளது. அப்போ கணவனை ஏமாற்றும் பெண்களின் பாவத்தில் ஒரு பங்கு ஹவ்வாவுக்கும் போகும் என்பதும் இதிலிருந்து புரிகிறது.

சுருக்கமாக முழு மனிதர்களும் இறைவனுக்கு மாறு செய்யும் எல்லா பாவங்களின் ஒரு பங்கை ஆதம் சுமக்க போகிறார். ஆதமுக்கு பிறகு இறைவனுக்கு மாறு செய்யும் விதத்தில் பாவ செயல்களை எந்தெந்த விதத்தில் முதலில் யார் ஆரம்பிக்கிறார்களோ அவர்கள் அவர்களுக்கு பிறகு அந்த பாவத்தை செய்கிறவர்களின் பாவத்தையும் சேர்ந்து சுமப்பார்கள். ( மறுமை நாளில் ஆதமின் பாவ சுமை எவ்வளவு பெரியதாக இருக்கும் என்பதை கற்பனை செய்து பாருங்கள் )

ஆனால் இப்படி பட்ட காரியம் பைபிளில் இல்லை என்பதை நன்றாக நினைவில் வைக்க வேண்டும்.

*சாத்தியக்கூறுகள்;~ 2*

# *தமது சமுதாயத்தினரை வழிகெடுத்த பாவத்தை தானே சுமக்கும் தலைவர்*

முதல் மனிதனின் தவறின் விளைவை முழு மனிதர்களும் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு இஸ்லாத்தில் இன்னொரு உதாரணத்தை பார்ப்போம்.

கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ரோமாபுரியின் சக்கரவர்த்தி) சீசருக்குக் கடிதம் எழுதினார்கள். (அதில்) 'நீர் (இஸ்லாமிய அழைப்பைப்) புறக்கணிப்பீராயின், உம் (பாமரக்) குடிமக்கள் (இஸ்லாத்தை ஏற்காமல் போவதின்) பாவம் உம்மைச் சேரும்' என்று கூறியிருந்தார்கள்.

ஸஹீஹ் புகாரி : 2936.

அத்தியாயம் : 56. அறப்போரும் அதன் வழிமுறைகளும

முஹம்மது ரோமாபுரியின் சக்கிரவர்த்திக்கு அழைப்பு பணி செய்யும் போது "நீர் இஸ்லாமிய அழைப்பை பறக்கணிப்பீராயீன் உம் குடிமக்கள் இஸ்லாத்தை ஏற்க்காமல் போவதின் பாவம் உம்மையே சேரும்" என்கிறார். இங்கே ஒரு தலைவரின் முடிவின் விளைவை அந்த சமூகத்தையே பாதிக்கிறதாக பார்க்கலாம்...... அந்த சக்கிரவர்த்தி இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளா விட்டால் அந்த மக்கள் பாதிக்கப்படுகிறார்கள்..... கடைசியில் அவர்கள் நரகில் போய் சேருகிறார்கள். இதற்கு ஆதாரமான வசனத்தை பாருங்கள்.

(அதற்கு அல்லாஹ் அவர்களிடம்) "ஜின்களிலும் மனிதர்களிலும் உங்களுக்கு

முன்னர் சென்றுவிட்ட கூட்டத்தினர்களுடன் நீங்களும் சேர்ந்து நரக நெருப்பில் நுழையுங்கள்” என்று கூறுவான், அவர்களில் ஒவ்வொரு சமுதாயத்தினரும் (நரகத்திற்குள்) நுழையும் பொழுதெல்லாம் தனக்கு முன் அங்கு வந்துள்ள தங்கள் (இனத்தாரின் முன் சென்ற)சகக்கூட்டத்தினரை சபிப்பார்கள், முடிவாக அவர்கள் யாவரும் நரகத்தையடைந்த பொழுது (அவர்களில்) பிந்தியவர்கள் (பின்பற்றியவர்கள், பின்பற்றப்பட்ட தலைவர்களான) முந்தியவர்களைப் பற்றி “எங்கள் இரட்சகனே இவர்கள்தாம் எங்களை வழிகெடுத்தவர்கள், ஆகவே, அவர்களுக்கு (எங்களைவிட) நரகத்தில் இரட்டிப்பான வேதனையைக் கொடுப்பாயாக” என்று கூறுவார்கள், அதற்கு அவன் “உங்களில் ஒவ்வொருவருக்குமே இரட்டிப்பு (வேதனை) உண்டு, எனினும், (இதன் காரணத்தை) நீங்கள் அறியமாட்டீர்கள்” என்று கூறுவான்.

(அல்குர்ஆன் : 7:38)

தலைவரின் முடிவின் விளைவின் மூலம் நரகில் போன மக்கள் "நாங்கள் நரகில் வர காரணம் எங்கள் தலைவர்கள் தான் காரணம் என்று சொல்லி தங்கள் தலைவர்களை குற்றம் சொல்வதை பார்க்கலாம்...... ஒரு வேளை தலைவர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருந்தால் அந்த மக்கள் நரகில் போயிருக்க மாட்டார்கள்.....ஆக ஒரு தலைவரின் முடிவு அந்த சமூகத்தையே பாதிக்க வைக்கிறது....... இதே போல தான் ஆதாமின் பாவத்தின் விளைவை முழு மனிதர்களும் அனுபவிக்கிறார்கள்.

## *சாத்தியக்கூறு ;~ 3*

## *முஹம்மதுவின் தேர்வு தனது சமுதாயத்தையே பாதிக்குமாம்*

ஆதாமின் பாவத்தின் விளைவை முழு மனிதர்களும் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு உதாரணமாக அல்லது அது ஒரு மனிதனின் தவறின் விளைவை முழு மனிதர்களும் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு உதாரணமாக முஹம்மதுவின் வாழ்க்கையில் நடந்த ஒரு உதாரணத்தை பார்ப்போம். முஹம்மது விண்ணுலகின் பயணத்தின் போது நடைபெற்ற சம்பவத்தை கீழே உள்ள ஹதீஸில் பாருங்கள்



அபூ ஹுரைரா(ரலி), அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'ஈலியா' (எனும் ஜெரூசலத்து)க்கு அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அன்னாரிடம் மது மற்றும் பால் கோப்பைகள் இரண்டு கொண்டுவரப்பட்டன. அவ்விரண்டையும் அவர்கள் கூர்ந்து நோக்கிவிட்டு, பால் கோப்பையை எடுத்துக்கொண்டார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் 'உங்களை இயற்கை நெறியின் பக்கம் செலுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! மதுக் கோப்பையை நீங்கள் எடுத்திருந்தால் உங்கள் சமுதாயம் வழிதவறிப் போயிருக்கும்' என்று கூறினார்கள்.

ஸஹீஹ் புகாரி : 4709.

அத்தியாயம் : 65. திருக்குர்ஆன் விளக்கவுரை

இதே ஹதீஸ் புகாரி 3394, முஸ்லிம் 272 ஆகிய ஹதீஸ்களிலும் உள்ளது.

இங்கே முஹம்மதுவின் விண்ணுல பயணத்தின் போது அவருக்கு மது மற்றும் பால் ஆகிய இரண்டு கோப்பைகள் கொடுக்கபட்டது... ஆனால் முஹம்மது அதில் பாலை தான் தேர்வு செய்கிறார். அப்போது வானவர் சொல்வதை பாருங்கள்.

"மது கோப்பையை நீங்கள் எடுத்திருந்தால் உங்கள் சமுதாயம் வழிதவறி போயிருக்கும்".

இங்கே வானவர் சொல்லும்போது முஹம்மது என்னும் ஒருவரின் தெரிந்து கொள்ளுதல் என்பது அவரது சமூகத்தையே பாதிப்புக்குள்ளாக்கும் என்பதை பார்க்கலாம்.... முஹம்மதுவின் சமுதாயம் என்பது முழு மனிதர்களும் என்று இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். ஆனால் முழு மனிதர்களும் நேர்வழியில் இருக்கிறார்களா என்று கேட்டால் அவ்வாறு இல்லை..... அப்போ ஜிப்ரியேல் சொன்னது தவறாக மாறி விட்டது என்றாலும் நாம் அதுக்குள் போகவில்லை.. முஹம்மதுவின் தெரிந்து கொள்ளுதல் என்பது அவரது சமூகத்தையே பாதிப்புக்குள்ளாக்கும் என்பதை போல தான் ஆதாமின் பாவத்தின் விளைவை முழு மனிதர்களும் அனுபவிக்கிறார்கள்

## *சாத்தியக்கூறு ;~ 4*

## *பாதிக்கப்படும் இணைவைப்பாளர்களின் குழந்தைகள்*

ஆதாமின் பாவத்தின் விளைவை ஆதமின் சந்ததிகளும் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு உதாரணமாக இஸ்லாத்தில் இன்னொரு உதாரணத்தையும் பார்ப்போம். கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்.

ஸஅப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்களிடம் "இணைவைப் போ(ரான எதிரிநாட்டின)ரின் பெண்களும் குழந்தைகளும் (போரில் சிக்கிச்) சேதமடையும் (வாய்ப்பு உண்டு என்னும்) பட்சத்தில் அவர்கள்மீது இரவு நேரத்தில் தாக்குதல் நடத்தலாமா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அவர்களும் (எதிரிகளான) அவர்களைச் சேர்ந்தவர்களே" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 3589.

அத்தியாயம் : 32. அறப்போரும் வழிகாட்டு நெறிகளும்

இங்கே இரவு நேரத்தில் இணைவைப்போரின் மீது தாக்குதல் நடத்தும் போது அந்த இணைவைப்பாளர்களுடன் சேர்ந்து அவர்களுடைய பெண்களும் குழந்தைகளும் பாதிக்கப்படுவதை நாம் இங்கே பார்க்கலாம். இதே போல தான் ஆதம் செய்த பாவத்தின் விளைவை அவனுடைய சந்ததிகளும் அனுபவிக்கிறார்கள்...

இன்னும் குர்ஆனில் நூஹ் நபியின் காலத்தில் அந்த சமூகத்தினரின் தவறு காரணமாக அல்லாஹ் அந்த சமூகத்தினரை தண்ணீரினால் அழிக்கும் சம்பவத்தை பார்க்கலாம்.....கீழே அந்த வசனங்களை பாருங்கள்

பின்னும், அவரை அவர்கள் பொய்யாக்கினர், ஆதலால், அவரையும், அவருடனிருந்தோரையும் கப்பலில் (ஏற்றிக்)காப்பாற்றினோம், மேலும், நம்முடைய வசனங்களைப் பொய்படுத்தியவர்களை(ப் பெரு வெள்ளத்தில்) மூழ்கடித்து விட்டோம், நிச்சயமாக அவர்கள் (சத்தியத்தைக் காண முடியாத) குருட்டு சமூகத்தாராகவே இருந்தனர்.

(அல்குர்ஆன் : 7:64)

பின்னர் அவர்கள், அவரைப் பொய்யாக்கிவிட்டனர், ஆகவே, நாம் அவரையும், அவரைச் சார்ந்தோரையும் கப்பலில் (ஏற்றிக்) காப்பாற்றினோம், மேலும், அவர்களை (முன்னவர்களுக்குப்) பின் தோன்றல்களாகவும் நாம் ஆக்கினோம், (இன்னும் நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கியோரை(ப் பெருவெள்ளத்தில்) மூழ்கடித்தோம், பின்னர் அச்சமூட்டி எச்சரிக்கை செய்யப்பட்டவர்களுடைய முடிவு எப்படி இருந்தது என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக!

(அல்குர்ஆன் : 10:73)

ஆகவே, அவரையும் (விசுவாசங்கொண்டவர்களாக) அவருடன் இருந்தவர்களையும் (மற்ற ஜீவராசிகளால்) நிறைக்கப்பட்டிருந்த கப்பலில் (ஏற்றி) நாம் காப்பாற்றினோம்.

(அல்குர்ஆன் : 26:119)

இங்கே நூஹ் நபியின் கூட இருந்தவர்களை மட்டுமே அல்லாஹ் காப்பாற்றினான்......மீதம் உள்ள எல்லோரையும் அல்லாஹ் அழித்ததாக



பார்க்கலாம். இதில் காபீர்களின்  குழந்தைகளும் அழிக்கபட்டதாக தான் நாம் புரிந்துகொள்ள முடிகிறது..... குழந்தைகளை காப்பாற்றியதாக குர்ஆனில் இல்லை.....

இன்னும் லூத் நபியின் காலத்தில் உள்ள சமூகத்தை அல்லாஹ் அழித்த சம்பவத்தையும் குர்ஆனில் பார்க்க முடிகிறது. கீழே உள்ள வசனத்தை பாருங்கள்.

நிச்சயமாக ‘லூத்’தும் (நமது தூதர்களாக) அனுப்பப்பட்டவர்களில் உள்ளவராவர்.

(அல்குர்ஆன் : 37:133)

அவரையும், அவருடைய குடும்பத்தினர் அனைவரையும் நாம் காப்பாற்றியதை (நினைவு கூர்வீராக!)

(அல்குர்ஆன் : 37:134)

தங்கிவிட்டோர்களில் இருந்துவிட்ட (அவருடைய) கிழ (மனை)வியைத் தவிர (அவள் வேதனை செய்யப்படுபவர்களுடன் தங்கிவிட்டாள்).

(அல்குர்ஆன் : 37:135)

பின்னர், மற்றவர்களை நாம் அழித்துவிட்டோம்.

(அல்குர்ஆன் : 37:136)

இங்கேயும் லூத் நபியின் சமூகத்தை முழுவதுமாக அல்லாஹ் அழிக்கும் போது லூத்தையும் அவரது குடுப்பத்தினரையும் மட்டுமே அல்லாஹ் காப்பாற்றினதாக கூறுகிறான்....அப்போது அந்த சமுதாயத்திலுள்ள குழந்தைகளும் அழிக்கபட்டார்கள் என்று தான் புரிந்து கொள்ள முடிகிறது...... அதாவது அந்த



சமுதாயத்தினர் செய்த பாவத்தின் விளைவாக கிடைக்கும் தண்டனையை அவர்களின் பிள்ளைகளும் அனுபவிக்கிறார்கள்....இது போல தான் ஆதமின் பாவத்தின் விளைவை அவனுடைய சந்ததிகளும் அனுபவிக்கிறார்கள்

## *சாத்தியக்கூறு ;~ 5*

# *இப்றாஹீம் காலத்து பல்லி செய்த தவறுக்காக தற்போதைய பல்லிகளை கொலை செய்ய சொன்ன முஹம்மது*

ஆதாமின் பாவத்தின் விளைவை அவனுடைய சந்ததிகள் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு உதாரணமாக முஹம்மது சொன்ன ஒரு சம்பவத்தை பார்ப்போம். கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்.

உம்மு ஷுரைக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்திரவிட்டார்கள். மேலும், அவர்கள், 'அது இப்ராஹீம்(அலை) அவர்கள் தீக்குண்டத்தில் எறியப்பட்டபோது நெருப்பை) அவர்களுக்கெதிராக ஊதிவிட்டுக் கொண்டிருந்தது' என்றும் கூறினார்கள்.

ஸஹீஹ் புகாரி : 3359.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்

மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

அவற்றில் அனைவரது அறிவிப்பிலும் மேற்கண்ட ஹதீஸில் உள்ளதைப் போன்றே

இடம் பெற்றுள்ளது. ஆனால், ஜரீர் பின் ஹாஸிம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் மட்டும் பின்வருமாறு காணப்படுகிறது:

முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படுகின்றன. இரண்டாவது அடியில் கொன்றவருக்கு அதைவிடக் குறைவான நன்மையும், மூன்றாவது அடியில் கொன்றவருக்கு அதைவிடக் குறைவான நன்மையும் எழுதப்படும்.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில் "முதலாவது அடியில் கொன்றவருக்கு எழுபது நன்மைகள் (எழுதப்படும்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 4510.

அத்தியாயம் : 39. முகமன் (சலாம்)

நான் ஆயிஷா (ரலி) அவர்களிடத்தில் வந்தேன். அவர்களின் வீட்டில் ஈட்டி வைக்கப்பட்டிருந்ததைக் கண்டேன். முஃமின்களின் தாயே இதை (இந்த ஈட்டியை) வைத்து தாங்கள் என்ன செய்வீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் இதை வைத்து நாங்கள் பல்லிகளைக் கொல்வோம். ஏனென்றால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு (இவ்வாறு) சொன்னார்கள். இப்ராஹிம் (அலை) அவர்கள் நெருப்பில் போடப்பட்ட போது பல்லியைத் தவிர பூமியிலிருந்த எல்லா உயிரினமும் நெருப்பை வாயால் ஊதி அனைத்தது. ஆனால் பல்லி மாத்திரம் அவர்களுக்கு எதிராக (நெருப்பை) ஊதிவிட்டது. இதனால் தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைக் கொல்லும்படி கட்டளையிட்டார்கள் என்று ஆயிஷா கூறினார்.

இபின் மாஜா ஹதீஸ் 3231

2000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த இப்றாஹீம் நபி தீகுண்டத்தில் இருந்தபோது ஏதோ ஒரு பல்லி அந்த நெருப்பு எரியும்டி ஊதியதினால் தற்போது உள்ள

பல்லிகளை முஹம்மது கொலை செய்ய சொல்கிறார். அதாவது  இப்றாஹீம் காலத்து பல்லி செய்த தவறுக்காக தற்போதைய பல்லிகளும் அதின் தண்டனையை அனுபவிக்கிறது. இதே போல தான் ஆதமின் மீறுதல் காரணமாக முழு மனிதர்களும் பாவிகளாக மாற்றப்பட்டனர்.

***சாத்தியக்கூறு ;~ 6***

***ஈஸா நபிக்கு முன் உள்ள யூதர்கள் செய்த பாவத்துக்காக தற்போதைய யூதர்கள் அனுபவிக்கும் தண்டனை***

ஆதாம் செய்த பாவத்தின் விளைவை அவனுடைய சந்ததிகளும் அனுபவிக்கிறார்கள் என்பதுக்கு உதாரணமாக குர்ஆனில்  யூதர்களை பற்றி சொல்லப்பட்டுள்ள சம்பவத்தை பார்ப்போம்.

யூத சமுதாயம் நபிமார்களை கொலை செய்தார்கள் என்பதால் அவர்கள் சபிக்கபட்டார்கள் என்று குர்ஆன் சொல்கிறது. கீழே உள்ள வசனங்களை பாருங்கள்.

. வறுமையும் இழிவும் அவர்கள்( யூதர்கள்) மீது சாட்டப்பட்டு விட்டன; மேலும் அல்லாஹ்வின் கோபத்திற்கும் அவர்கள் ஆளானார்கள்; இது ஏனென்றால் திடமாகவே அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை நிராகரித்தும், அநியாயமாக அவர்கள் நபிமார்களைக் கொலை செய்து வந்ததும்தான். இந்த நிலை அவர்கள் (அல்லாஹ்வுக்குப் பணியாது) மாறு செய்து வந்ததும், (அல்லாஹ் விதித்த) வரம்புகளை மீறிக்கொண்டேயிருந்ததினாலும் ஏற்பட்டது.

(அல்குர்ஆன் : 2:61)

அவர்கள், எங்கிருப்பினும் அவர்கள் மீது இழிவு விதிக்கப்பட்டுள்ளது; அல்லாஹ்விடமிருந்தும், மனிதர்களிடமிருந்தும் அவர்களுக்கு(ப் பாதுகாவலான) ஒப்பந்தமின்றி (அவர்கள் தப்ப முடியாது); அல்லாஹ்வின் கோபத்தில் அவர்கள்



சிக்கிக் கொண்டார்கள்; ஏழ்மையும் அவர்கள் மீது விதிக்கப்பட்டு விட்டது; இது ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வின் ஆயத்களை நிராகரித்தார்கள்; அநியாயமாக நபிமார்களை கொலை செய்தார்கள்; இன்னும் அவர்கள் பாவம் செய்து கொண்டும் (இறையாணையை ) மீறி நடந்து கொண்டும் இருந்ததுதான் (காரணமாகும்).

(அல்குர்ஆன் : 3:112)

அவர்களுடைய வாக்குறுதியை அவர்கள் மீறியதாலும்; அல்லாஹ்வின் வசனங்களை அவர்கள் நிராகரித்து விட்டதாலும், அநியாயமாக அவர்கள் நபிமார்களைக் கொலை செய்ததாலும், “எங்கள் இதயங்கள் திரையிடப்பட்டுள்ளன.” (எனவே எந்த உபதேசமும் அங்கே செல்லாது) என்று அவர்கள் கூறியதாலும், (அல்லாஹ் அவர்களைச் சபித்து விட்டான்;) அவர்களுடைய நிராகரிப்பின் காரணத்தால் அல்லாஹ் (அவர்களுடைய இருதயங்களின் மீது) முத்திரையிட்டுவிட்டான். ஆகவே அவர்களில் சிலரைத் தவிர (மற்றவர்கள்) ஈமான் கொள்ள மாட்டார்கள்.

(அல்குர்ஆன் : 4:155)

இந்த வசனங்களில் பல காரணங்களுக்காக யூதர்கள் சபிக்கபட்டார்கள் என்று சொல்லபட்டிருந்தாலும் குறிப்பாக "நபிமார்களை கொலை செய்த பாவத்துக்காகவும் சபிக்கபட்டார்கள்" என்று உள்ளது.  யூதர்களுக்கு வந்த கடைசி நபி ஈஸா ஆகும். அதின் பிறகு 600 வருடங்கள் தாண்டி தான் முஹம்மது நபியாக வருகிறார். அப்படியானால் 600 வருடங்களுக்கு முன்னோர் செய்த பாவத்துக்காக அந்த பாவத்தை மேற்கோள் காட்டி தற்போதைய யூதர்களை அல்லாஹ் சபிக்கிறதை பார்க்கலாம்.  இதே போல தான் முதல் மனிதன் செய்த தவறினால் முழு மனிதர்களும் பாவிகளாக மாற்றப்பட்டனர்.

இந்த விஷயத்தை நாம் சொல்லும் போது "முஹம்மது காலத்து யூதர்கள் அந்த கொலைகளை ஆதரித்தனர் என்பதால் தான் அவர்கள் சபிக்கபட்டார்கள்" என்று தவறான விளக்கத்தை இஸ்லாமியர்கள் சொல்வார்கள்.. ஆனால் இப்படி ஒரு விளக்கத்தை அல்லாஹ் குர்ஆனில் எங்கேயுமே சொல்லவில்லை. கொலையை ஆதரிக்கிறவர்களுக்கு எப்படி தண்டனை கொடுக்க முடியும் என்று ஒரு கேள்வி எழும்பும்.. காரணம் என்னவென்றால் உதாரணமாக இன்றைக்கு ஒருவர் ஒரு கொலையை செய்தால் கொலை செய்தவர் தண்டிக்கபடுவார். அந்த கொலையை



ஆதரித்து பேசுகிறவர்களை கொலை வழக்கில் தண்டிக்க மாட்டார்கள். அவ்வாறு ஆதரிக்கிறதினால் தான் இப்படி அல்லாஹ் சொல்கிறான் என்றால் "நபிமார்களின் கொலையை ஆதரித்ததினாலும் சபிக்கபட்டுள்ளீர்கள்" என்று சொல்லியிருக்கணும். மாறாக "நபிமார்களை கொலை செய்ததாலும்" என்று தற்போதைய யூதர்களை பார்த்து அல்லாஹ் சொல்கிறான். இதற்கு ஆதாரமாக கீழே உள்ள வசனத்தை பாருங்கள்.

........... *“நீங்கள் உண்மை விசுவாசிகளாக இருந்தால், ஏன் அல்லாஹ்வின் முந்திய நபிமார்களை நீங்கள் கொலை செய்தீர்கள்?” என்று அவர்களிடம் (நபியே!) நீர் கேட்பீராக.*

(அல்குர்ஆன் : 2:91)

முஹம்மது காலத்து யூதர்களை பார்த்து "நீங்கள் ஏன் நபிமார்களை கொலை செய்தீர்கள்" என்று கேட்கிறான்.

.....ஆக யூதர்களின் முன்னோர் செய்த பாவத்துக்காக தற்போதைய யூதர்களும் அந்த பாவத்தின் விளைவை அனுபவிக்கிறார்கள் என்று குர்ஆன் தெளிவாக சொல்கிறது...... இதே போல தான் ஆதாமின் பாவத்தின் விளைவை அவனுடைய சந்ததிகளும் அனுபவிக்கிறார்கள்.

## *ஆதமின் பாவத்தின் விளைவாக தான் மனிதன் சுவனத்தின் நன்மைகளை இழந்து வெளியே வந்தான் என்று உறுதிபடுத்தும் தோரா*

ஆதமின் பாவத்தின் விளைவாக தான் மனிதன் சுவனத்தின் நன்மைகளை இழந்து வெளியே வந்தான் என்பதை தோரா உறுதிபடுத்துகிறது. அதை எப்படி என்று பார்ப்போம். கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்.



அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஆதம் (அலை) அவர்களும் மூசா (அலை) அவர்களும் தர்க்கம் செய்துகொண்டார்கள். மூசா (அலை) அவர்கள், "ஆதம் அவர்களே! எங்கள் தந்தையான நீங்கள் (உங்கள் பாவத்தின் காரணத்தால்) எங்களை இழப்புக்குள்ளாக்கிவிட்டீர்கள்;சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றிவிட்டீர்கள்" என்று சொன்னார்கள்.

அதற்கு மூசாவிடம் ஆதம் (அலை) அவர்கள், "நீர்தான் மூசாவா? அல்லாஹ், தன்னுடன் உரையாடுவதற்கு உம்மையே தேர்ந்தெடுத்தான்; அவன் தனது கையால் உமக்காக (வேதத்தை) எழுதினான். (இத்தகைய) நீங்கள், அல்லாஹ் என்னைப் படைப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே என்மீது அவன் விதித்துவிட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் பழிக்கின்றீர்களா?" என்று கேட்டார்கள்.

(இந்த பதில் மூலம்) மூசா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்து விட்டார்கள்;தோற்கடித்துவிட்டார்கள்" என (இரண்டு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸ் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில் இப்னு அபீஉமர் அல்மக்கீ (ரஹ்), அஹ்மத் பின் அப்தா (ரஹ்) ஆகியோரின் அறிவிப்புகளில் ஒன்றில், "வரைந்தான்" ("கத்த") என இடம்பெற்றுள்ளது. மற்றொன்றில் "அவன் தனது கரத்தால் உமக்காக "தவ்ராத்"தை எழுதினான்" என்று ஆதம் (அலை) அவர்கள் கூறியதாகக் காணப்படுகிறது.

ஸஹீஹ் முஸ்லிம் : 5157.

அத்தியாயம் : 46. (தலை)விதி

இந்த ஹதீஸில் ஆதமுக்கும் மூஸா நபிக்கும் இடையே ஒரு தர்க்கம் நடக்கிறது. நிச்சயமாக இது உலகில் நடக்கவில்லை. காரணம் ஆதமும் முஸா நபியும் வெவ்வேறு காலங்களிலாகும். இரண்டாவது முஸா நபி முஹம்மதுவை போல மிஃராஜ் பயணம் போனதாக செய்தி இல்லை. அப்படியானால் இது மூஸா நபியின் மரணத்துக்கு பின்பு தான் நடந்ததாக நாம் எடுத்துக்கொள்ள முடியும். இதை



மனதில் வைத்து கொண்டு ஆதமுக்கும் மூஸா நபிக்கும் இடையே ஏற்பட்ட தர்க்கத்தை பார்ப்போம்.

மூஸா நபி ஆதமை பார்த்து "ஆதமே எங்கள் தந்தையான நீங்கள் உங்கள் பாவத்தின் காரணத்தால் எங்களை இழப்புக்குள்ளாக்கிவிட்டீர்கள். சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றி விட்டீர்கள்" என்று கேட்கிறார். அதற்கு ஆதம் "ஏற்க்கனவே என் மீது அல்லாஹ் விதியாக்கி விட்ட விஷயத்திற்க்காக என்னை பழிக்கிறீர்களா" என்று கேட்கிறார். இங்கே நாம் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் ஆதமின் பாவத்தின் காரணமாக மனிதன் பூமியில் வரவில்லை என்றால் அதை தானே ஆதம் அங்கே சொல்லியிருக்க வேண்டும். அதை விட்டு விட்டு தனது பாவத்தின் காரணம் அல்லாஹ் தான் என்று தனது தவறை அல்லாஹ்வின் மீது போடுகிறார். இதிலிருந்து ஆதமின் பாவத்தின் காரணமாக தான் மனிதர்கள் சுவனத்தின் நன்மைகளை இழந்தார்கள் என்பது நிரூபணம் ஆகிறது. ஆதமும் தனது பாவத்தின் காரணமாக தான் மனிதர்கள் பூமியில் வந்தார்கள் என்று மறுமை நாள் வரைக்கும் நம்புகிறார்...( முஸ்லீம் 329)

சரி ஆதமை பார்த்து "நீங்கள் தானே நாங்கள் சுவனத்திலிருந்து வெளியேற காரணம்" என்று கேட்டது யார் என்றால் தோரா என்னும் இறைவேதம் யூதர்களுக்கு கொடுத்த மூஸா நபி ஆகும்... அப்போது தோரா என்னும் வேதத்தை உலகில் உள்ள எல்லோரையும் விட மூஸா நபி தான் நன்றாக புரிந்து வைத்திருப்பார். அப்படியானால் அந்த தோராவின் அடிப்படையில் தான் மூஸா தனது மரணத்துக்கு பின்பு ஆதம் நபியிடம் இந்த கேள்வியை கேட்கிறார் என்றால் மூஸா நபி தனது சமுதாயத்திடம் முழக்க முழுக்க "ஆதமின் பாவத்தின் காரணமாக தான் மனிதர்கள் பூமியில் வந்தார்கள்" என்று தானே போதித்திருப்பார்.....? இங்கே மூஸா நபி தோராவை தவறாக புரிந்தார் என்று யாருக்குமே கேள்வி எழுப்ப முடியாது. அப்படியானால் தோராவை தவறாக புரிந்த மூஸா நபியை அல்லாஹ் திருத்தியதாக ஆதாரம் வேண்டும். அப்படி எங்கேயுமே ஆதாரம் இல்லை.... இரண்டாவது இந்த உரையாடல் மூஸாவின் மரணத்துக்கு பின்பு தான் நடக்கிறது என்பதால் அவர் உலகில் வாழ்ந்த காலம் முழுவதும் ஆதமின் பாவத்தின் காரணமாக தான் மனிதர்கள் பூமியில் வந்தார்கள் என்று தான் தோராவின் அடிப்படையில் நம்பினார் என்று நிரூபணம் ஆகிறது. ஆக தோராவின் அடிப்படையில் ஆதமின் பாவத்தின் காரணமாக தான் மனிதர்கள் பூமியில் வந்தார்கள்.

## *ஒருவர் பாவ சுமையை இன்னொருவர் சுமக்க மாட்டாரா ?*



நாம் ஆதமின் பாவத்தின் விளைவாக தான் மனிதர்கள் பூமியில் வந்தார்கள் என்னும் கருத்தை இவ்வாறு இஸ்லாமிய கிரந்தங்களிலிருந்தே எடுத்து புரிய வைக்கும்போது "ஒருவர் பாவ சுமையை இன்னொருவர் சுமக்க மாட்டார்"என்று குர்ஆனில் உள்ளதே என்று வாதம் வைப்பார்கள். அது மறுமை நாளில் சுமக்கும் சம்பவங்களை பற்றி தான் பேசுகிறது. ஆனால் நாம் இங்கே பேசுவது முழுக்க முழுக்க மனிதன் பிறக்கும் போதே பாவ இயல்புடன் தான் பிறக்கிறான் என்பதேயாகும்.  இனி அவர்கள் மேற்கோள் காட்டும் வசனங்களை முதலாவது கீழே பாருங்கள்.

“.....,.......... - பாவம் செய்யும் ஒவ்வோர் ஆத்மாவும் தனக்கே, கேட்டைத் தேடிக்கொள்கிறது; ஓர் ஆத்மாவின் (பாவச்)சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது.
...............

(அல்குர்ஆன் : 6:164)

எவன் நேர்வழியில் செல்கின்றானோ, அவன் தன்னுடைய நன்மைக்காகவே நேர் வழியில் செல்கிறான்; எவன் வழி கேட்டில் செல்கின்றானோ, அவன் தனக்கே கேடு செய்து கொண்டான்; (நிச்சயமாக) ஒருவனுடைய பாவச்சுமையை மற்றொருவன் சுமக்கமாட்டான்; (நம்) தூதரை அனுப்பாத வரையில் (எவரையும்) நாம் வேதனை செய்வதில்லை.

(அல்குர்ஆன் : 17:15)

இந்த வசனங்களில் ஒருவருடைய பாவ சுமையை இன்னொருவர் சுமக்க மாட்டார் என்று உள்ளது.. ஆனால் இதனுடைய இணை வசனங்களை வைத்தே இந்த வசனங்கள் என்ன சொல்கிறது என்று முடிவு செய்ய வேண்டும்.

கீழே உள்ள வசனங்களை பாருங்கள்.

(மறுமை நாளில் தன்) சுமையைக் சுமக்கும் ஒருவன், வேறொருவனுடைய சுமையைச் சுமக்க மாட்டான்; அன்றியும் பளுவான சுமையைச் சுமப்பவன், அதில் (சிறிதேனும்) சுமந்து கொள்ளும்படி (வேறொருவனை) அழைத்தாலும், அவன் சொந்தக்காரனாக இருந்தபோதிலும் - அதில் சிறிதளவு கூட அவ்வாறு சுமந்து கொள்ளப்படாது; .........

(அல்குர்ஆன் : 35:18)

................ அன்றியும், (தன் பாவச் சுமையைச்) சுமக்கிறவன், மற்றொருவன் (பாவச்) சுமையைச் சுமக்க மாட்டான்; ............

(அல்குர்ஆன் : 39:7)

(அதாவது:) சுமக்கிறவன் பிறிதொருவனின் சுமையைச் சுமக்க மாட்டான்;

(அல்குர்ஆன் : 53:38)

மேலே உள்ள இந்த வசனங்களில் "சுமையை சுமக்கிறவன் இன்னொருவரின் சுமையை சுமக்க மாட்டார்" என்று உள்ளது... ஆனால் நாம் ஏற்கனவே பார்த்ததுபடி எல்லோருமே பாவ சுமையை சுமக்கிறவர்கள் தான். ஆனால் தவறானவர்கள் யாரையெல்லாம் வழிகெடுத்தார்களோ அவர்களுடைய பாவங்களையும் சுமப்பார் என்று தான் குர்ஆன் சொல்கிறது. இதற்கு ஆதாரமாக கீழே உள்ள வசனங்களை பாருங்கள்.



கியாம நாளில் அவர்கள், தங்கள் (பாவச்) சுமைகளை முழுமையாக சுமக்கட்டும்; மேலும் அறிவில்லாமல் இவர்கள் எவர்களை வழி கெடுத்தார்களோ, அவர்களுடைய (பாவச்) சுமைகளையும் (சுமக்கட்டும்); இவர்கள் (சுமக்கும்) சுமை மிகவும் கெட்டதல்லவா?.

(அல்குர்ஆன் : 16:25)

ஆனால் நிச்சயமாக அவர்கள் தங்களுடைய (பளுவான பாவச்) சுமைகளையும், தம் (பளுவான பாவச்) சுமைகளுடன் (அவர்கள் வழிகெடுத்தோரின் பளுவான பாவச்) சுமைகளையும் சுமப்பார்கள்; ...........

(அல்குர்ஆன் : 29:13)

மேலே உள்ள இந்த வசனங்களில் தவறானவர்கள் தங்கள் பாவத்தை சுமபபதுமல்லாமல் அவர்கள் யாரையெல்லாம் வழிகெடுத்தார்களோ அவர்களுடைய பாவங்களையும் சேர்த்து சேர்த்தே சுமப்பார்கள் என்று உள்ளது. அதாவது கொலைக்கு முன்னுதாரணமாக இருந்தவர் காயீன். அப்படியானால் இந்த உலகில் யாரெல்லாம் கொலை என்னும் பாவம் செய்கிறார்களோ அவர்களின் பாவத்தின் ஒரு பங்கை காயீனும் சேர்த்து சுமப்பார்......(புகாரி 3335)

# *எல்லா குழந்தைகளுமே முஸ்லிமாகவே பிறக்கிறதா?*

இதை நாம் கூறும்போது பொதுவாக இஸ்லாமியர்கள் வைக்கும் மறுப்பு ஒன்று உள்ளது. அது என்னவென்றால் "பிறக்கும் எல்லா குழந்தைகளுமே முஸ்லிமாகவே பிறக்கிறது( புகாரி 1358) என்பதால் பிறக்கும் எல்லா குழந்தைகளுமே பரிசுத்தமாக தான் பிறக்கிறார்கள்" என்பதாகும். பிறக்கும் குழந்தைகள் முஸ்லிம்களாக பிறக்கட்டும் பிரச்சனையில்லை. ஆனால் அது பரிசுத்தமாக பிறக்கிறார்கள் என்று இல்லையே. நமது வாதம் என்னவெனில் பிறக்கும் எல்லா குழந்தைகளுமே



பாவிகளாக பிறக்கிறார்கள் என்பதே.  இன்னும் எல்லா குழந்தைகளும் முஸ்லிம்களாக பிறப்பதில்லை.  மாறாக இறைமறுப்பாளனாக பிறக்கும் குழந்தைகளும் உண்டு. உதாரணமாக கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"களிர்" அவர்கள் கொன்றுவிட்ட சிறுவன் (இறை)மறுப்பாளனாகவே படைக்கப்பட்டான். அவன் (உயிருடன்) வாழ்ந்திருந்தால் தன் பெற்றோரை வழிகேட்டிலும் (இறை)மறுப்பிலும் தள்ளிவிட்டிருப்பான்.

இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 5173.

அத்தியாயம் : 46. (தலை)விதி

இன்னும் ஒரு குழந்தை இறந்ததை கண்ட ஆயிஷா அவர்கள்  "சுவனத்தின் ஒரு சிட்டுக்குருவி" என்று சொன்னார்கள். அப்போது ஆயிஷா அவ்வாறு சொன்னதை முஹம்மது நபி மறுத்து "அல்லாஹ் மனிதர்களை  படைக்கும் போதே நரகத்துக்கும் சுவனத்துக்கென்றும் மனிதர்களை படைத்திருக்கிறான்" என்று சொன்னார்.

இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில்) ஒரு குழந்தை இறந்துபோனது. அப்போது நான், "அதற்கு நல்வாழ்த்துகள்! அது சொர்க்கத்தின் சிட்டுக்குருவிகளில் ஒரு சிட்டுக்குருவி" என்று சொன்னேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உனக்குத் தெரியாதா? அல்லாஹ் சொர்க்கத்தையும் நரகத்தையும் படைத்தபோதே, அதற்கெனச் சிலரையும் இதற்கெனச் சிலரையும் படைத்துவிட்டான்" என்று சொன்னார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 5174.

அத்தியாயம் : 46. (தலை)விதி

இதிலிருந்து பிறக்கும் குழந்தைகள் பின்பு குழநதையாகவே இறந்தாலும் சுவனம் போகாது என்பதும் பிறக்கும் குழந்தைகள் எல்லோருமே பாவ இயல்புடன் தான் பிறக்கிறார்கள் என்பதும் உறுதி. இதை நாம் சொல்லும்போது "அச்சமூட்டி எச்சரிக்கை செய்யாதவர்களை தண்டிப்பதில்லை" என்று 17;15 ஆம் வசனத்தை மேற்கோள் காட்டி குழந்தையாகவே இறந்தாலும் நரகம் போகாது என்று சொல்லுவார்கள். ஆனால் இதுவும் தவறான விஷயம் ஆகும்

# *எச்சரிக்கை செய்யாத ஒருவனை அல்லாஹ் தண்டிக்கமாட்டானா*

எவன் நேர்வழியில் செல்கின்றானோ, அவன் தன்னுடைய நன்மைக்காகவே நேர் வழியில் செல்கிறான்; எவன் வழி கேட்டில் செல்கின்றானோ, அவன் தனக்கே கேடு செய்து கொண்டான்; (நிச்சயமாக) ஒருவனுடைய பாவச்சுமையை மற்றொருவன் சுமக்கமாட்டான்; *(நம்) தூதரை அனுப்பாத வரையில் (எவரையும்) நாம் வேதனை செய்வதில்லை.*

(அல்குர்ஆன் : 17:15)

ஆனால் அல்லாஹ் தண்டித்து இருக்கிறான். அதை பார்க்கும் முன்பு முதலில் முஹம்மது நபிக்கு முன்பு உள்ள நிலவரத்தை பார்ப்போம்.

முஹம்மதுவுக்கும் ஈஸாவுக்கும் இடையே எந்த இறைதூதரும் வரவில்லை புகாரி 3442

:~ஈஸா நபிக்கும் முஹம்மது நபிக்கும் இடையே 600 வருடங்கள் வித்தியாசம்

இன்னும் முஹம்மது வந்தது இஸ்ராயீல் மக்களுக்கு மட்டுமே ;3:49, 5:72, 43:59, 61:6

இனி முஹம்மதுவின் சமுதாயத்துக்கு முன்பும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்



வரவில்லை ;~ 28;46,  32;3, 34;44, 36;6

அப்போ மேலே உள்ள  இந்த குறிப்புகளிலிருந்து  முஹம்மதுவின் சமுதாங முன்பு இறைதூதர்கள் யாருமே வரவில்லை,,,,,,, ஆனால் முஹம்மதுவின் அப்பாவும் அம்மாவும் நரகில் உள்ளார்கள்.,

;~ முஹம்மதுவின் அம்மா நரகில் உள்ளார் முஸ்லிம் 1621, 1622

முஹம்மதுவின் அப்பாவும் நரகில் உள்ளார். ;~ முஸ்லிம் 347

*களீர் கொலை செய்த அப்பாவி குழந்தை*

......... (பிறகு) கடலிலிருந்து அவர்கள் வெளியேறியபோது சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுவனைக் கடந்து சென்றார்கள். களிர்(அலை) அவர்கள் அச்சிறுவனின் தலையைப் பிடித்து, தம் கையால் இப்படிப் பிடுங்கி (தனியே எடுத்து)விட்டார்கள்.

இந்த இடத்தில் அறிவிப்பாளர் கஃப்யான் இப்னு உயைனா(ரஹ்), தம் விரல் நுனிகளை எதையோ பறிப்பதைப் போல் காட்டி சைகை செய்தார்கள்.

அப்போது மூஸா(அலை) அவர்கள் களிர்(அலை) அவர்களிடம், 'ஒரு பாவமும் அறியாத ஒரு (பச்சிளம்) உயிரையா நீங்கள் கொன்றுவிட்டீர்கள்? அவன் வேறெந்த உயிரையும் பறிக்கவில்லையே? நீங்கள் மிகவும் தீய செயலைச் செய்துவிட்டீர்கள்' என்று கூறினார்கள். ..............

ஸஹீஹ் புகாரி : 3401.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்



பின்னர் (மரக்கலத்திலிருந்து இறங்கி) இருவரும் வழி நடக்கலானார்கள்; (வழியில்) ஒரு பையனை அவ்விருவரும் சந்தித்த போது, அவர் அவனைக் கொன்று விட்டார். (உடனே மூஸா) “கொலைக்குற்றமின்றி, பரிசுத்தமான ஜீவனைக் கொன்றுவிட்டீர்களே? நிச்சயமாக நீங்கள் பெருத்தக் கேடான ஒருகாரியத்தையே செய்து விட்டீர்கள்!” என்று (மூஸா) கூறினார்.

(அல்குர்ஆன் : 18:74)

இதற்க்கு களீர் கொடுக்கும் பதிலை பாருங்கள் ;~

............., அந்தச் சிறுவனுடைய விஷயம் என்னவெனில் அவன் இறை மறுப்பாளனாக இருந்தான். அவனுடைய தாய் தந்தையார் இறைநம்பிக்கையாளர்களாக இருந்தனர்' என்று ஓதினார்கள்.

ஸஹீஹ் புகாரி : 3401.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்

“(அடுத்து) அந்த சிறுவனுடைய தாய், தந்தையர் இருவரும் முஃமின்களாக இருக்கிறார்கள்; அவன் (வாலிபனாகி) அவ்விருவரையும் வழிகேட்டிலும், குஃப்ரிலும் சேர்த்து விடுவான் என்று நாம் பயந்தோம்.

(அல்குர்ஆன் : 18:80)

இன்னும் இந்த குழந்தை படைக்கபடும்போதே இறைமறுப்பாளனாக தான் படைக்கபட்டானாம் ;~

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"களிர்" அவர்கள் கொன்றுவிட்ட சிறுவன் (இறை)மறுப்பாளனாகவே படைக்கப்பட்டான். அவன் (உயிருடன்) வாழ்ந்திருந்தால் தன் பெற்றோரை வழிகேட்டிலும் (இறை)மறுப்பிலும் தள்ளிவிட்டிருப்பான்.



இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 5173.

அத்தியாயம் : 46. (தலை)விதி

அப்போ அந்த சிறுவனுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யாமல் அவன் சிறுவனாக இருக்கும்போதே நரகத்துக்காகவே அல்லாஹ் படைத்தான்.

ஆக அச்சமூட்டி எச்சரிக்கை செய்யாத மனிதர்களையும் சிறுவர்களையும் அல்லாஹ் தண்டிப்பான் என்பதை புரிந்து கொள்ளலாம்.

இதை சொல்லும்போது அஹ்மது ஹதீஸில் உள்ள ஒரு செய்தியை கொண்டு வருவார்கள், அது என்னவென்றால் ;~

மறுமை நாளில் நான்கு கூட்டத்தினர்( குழந்தைகள், அச்சமூட்டி எச்சரிக்கை செய்யபடாத மக்கள், முதியோர்,காது கேளாதோர்) அல்லாஹ்விடம் வருவார்கள், இதில் குழந்தைகளும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்யபடாத சமுதாயத்தினரும் வந்து "எங்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யப்படவில்லை," என்று சொல்வார்கள், அப்போது அவர்களிடம் இறைவன் உடன்படிக்கை செய்து விட்டு நரகில் குதிக்க சொல்லுவான்.,அப்போது நரகில் குதித்தவர்கள் சுவனத்துக்கு போவார்கள். குதிக்காதவர்கள் நரகில் போவார்கள்.

இந்த ஹதீஸை மேற்கோள் காட்டி இப்போது நரகில் உள்ளவர்கள் யார் என்றால் மறுமை நாளில் அல்லாஹ்விடம் உடன்படிக்கை செய்தும் நரகில் குதிக்காதவர்கள் என்பார்கள். அப்படியானால் அவர்கள் எப்போது உடன்படிக்கை செய்து கொண்டு அதை மீறுகிறார்களோ அப்போது தான் தண்டிக்க வேண்டும்.... அதுக்கு முரணாக இப்போவே அதாவது அப்பாவியாக இருக்கும்போதே அவனை நரகில் போடுவது பாவம் செய்யாதவனை தண்டிப்பதற்க்கு சமமே,,,,,,,

இன்னு கூடுதலாக பார்த்தால் ஒருவர் தனது வாழ்நாளில் அறிந்துகொண்டே தீய காரியங்கள் செய்து மரிக்கிறார்,,,,,, ஆனால் அல்லாஹ் அவனை மன்னிக்கிறான்.



அந்த ஹதீஸை பாருங்கள். ;~

*அறிந்துகொண்டே தீயசெயல்களை செய்து மரணித்தவருக்கு மறுமை நாளில் மன்னிப்பு*

நபி(ஸல்) அவர்கள் கூறினார்

(முன் காலத்தில்) *ஒருவர், வரம்பு மீறி (தீய செயல் புரிந்து) வந்தார். அவருக்கு மரணம் வந்தபோது தன் மகன்களை அழைத்து, 'நான் இறந்துவிட்டால் என்னை எரித்து விடுங்கள். பிறகு, என்னைப் பொடிப் பொடியாக்கி பின்னர் காற்றில் தூவி விடுங்கள்.* அல்லாஹ்வின் மீதாணையாக! (இவ்வளவும் செய்த பிறகும்) அல்லாஹ் என்னை உயிராக்க முடிந்தால் எவரையும் வேதனைப்படுத்தாத அளவிற்கு ஒரு வேதனையை (தண்டனையாக) எனக்கு அவன் அளிப்பான்' என்று கூறினார். *அவர் இறந்துவிட்டபோது அவ்வாறே அவரைச் செய்துவிட்டார்கள்.* உடனே அல்லாஹ், பூமியை நோக்கி, 'அவரி(ன் உடல் அணுக்களி)லிருந்து உன்னில் இருப்பவற்றை ஒன்று சேர்' என்று கட்டளையிட்டான். அவ்வாறே பூமி செய்தது. அவர் (அல்லாஹ்வின் முன்னிலையில் முழு உருப்பெற்று) நின்றபோது அல்லாஹ், நீ இப்படிச் செய்யும் படி உன்னைத் தூண்டியது எது?' என்று கேட்டான். அவர், 'என் இறைவா! உன் அச்சம் தான் இப்படிச் செய்யும்படி என்னைத் தூண்டியது' என்று பதிலளித்தார். *எனவே, அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளித்தான்*.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3481.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்

*இன்னொரு ஆதாரமும்* ;~

100 கொலைகள் செய்து மரித்தவருக்கு மன்னிப்பு ;~

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பனூ இஸ்ராயீல்களின் சமுதாயத்தில் ஒருவர் இருந்தார். அவர் தொண்ணூற்றொன்பது மனிதர்களைக் கொன்று விட்டிருந்தார். பிறகு (தன் குற்றங்களுக்காக மனம் வருந்தி, தனக்கு மன்னிப்புக் கிடைக்குமா என்று) விசாரித்தபடி, '(எனக்குப்) பாவ மன்னிப்புக் கிடைக்குமா?' என்று ஒரு பாதிரியாரிடம் வந்து கேட்டார். அந்தப் பாதிரியார், 'கிடைக்காது' என்று கூற, அவரையும் அம்மனிதர் கொன்றுவிட்டார். பிறகு, (மீண்டும் மனம் வருந்தி) விசாரிக்கலானார். அப்போது ஒருவர், '(நல்லோர் வாழும்) இன்ன ஊருக்குப் போ!' என்று அவருக்குக் கூறினார். (அந்த ஊரை நோக்கி அவர் சென்றபோது பாதி வழியில்) மரணம் அவரைத் தழுவியது. (மரணத் தருவாயில்) அவர் தன் நெஞ்சை அந்த ஊர் இருக்கும் திசையில் சாய்த்துக் கொண்(டே இறந்து விட்)டார்.

அப்போது இறை கருணையைப் பொழியும் வானவர்களும் இறை தண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரை யார் அழைத்துச் செல்வது என்று) தர்கித்தனர். உடனே அல்லாஹ் அதை நோக்கி, 'நீ நெருங்கி வா!' என்று (அவர் செல்லவிருந்த ஊருக்கு) உத்திரவிட்டான். இதை நோக்கி, 'நீ தூரப்போ!' என்று (அவர் வசித்து வந்த ஊருக்கு) உத்திரவிட்டான். பிறகு, 'அவ்விரண்டுக்குமிடையே உள்ள தூரத்தைக் கணக்கெடுங்கள்' என்று (வானவர்களுக்குக்) கூறினான். (அவ்வாறே கணக்கெடுத்த போது) செல்லவிருந்த ஊருக்கு (அவர் வசித்து வந்த ஊரை விட ஒரே) ஒரு சாண் அளவிற்கு அவர் (உடைய உடல்) சமீபமாக இருந்த காரணத்தால் அவருக்குப் பாவ மன்னிப்பு வழங்கப்பட்டது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3470.

அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்

அப்போ பாவம் செய்யாதவர்களை தண்டிக்கவும், பாவம் செய்தவர்களை மன்னிக்கவும் செய்கிற அல்லாஹ்வை நாம் பார்க்கலாம்.

## *எல்லா மனிதர்களும் பாவிகள் என்றால் அவர்களின் மீட்புக்கான வழி என்ன* ?



இஸ்லாத்தின் அடிப்படையில் எல்லா மனிதர்களும் பாவிகளாகவே பிறக்கிறார்கள் என்பதை நாம் மிக தெளிவான முறையில் பார்த்தோம். அப்படியானால் பாவியான ஒருவன் பரிசுத்தமான இடத்துக்கு அதாவது சுவனத்துக்கு போக முடியாது. அப்படியானால் இந்த பாவியாகவே பிறக்கும் மனிதர்களுக்கு ஒரு மீட்பர் தேவையாக இருக்கிறார். இந்த மீட்புக்கான விஷயத்தை பற்றி குர்ஆன் ஏதாவது சொல்கிறதா என்று பாத்தால் ஒன்றுமே சொல்லவில்லை. இஸ்லாம் சொல்லும் இரட்சிப்பு என்பது மிகவும் மோசமான ஒன்றாக உள்ளது. அதை தொடர்ந்து பார்ப்போம்

## .*இஸ்லாத்தில் இரட்சிப்பு* ;~

இஸ்லாத்தில் இரட்சிப்பு என்பது அவன் முஸ்லீமாக இருந்தால் மட்டுமே போதுமானது.....அவன் கலீமா சொல்லி விட்டு என்ன பாவம் வேண்டுமானாலும் செயுயலாம்

அதற்கான ஆதாரங்களை கீழே பார்போம்.

1 ;~

அபூ தர்(ரலி) அறிவித்தார்.

'உங்கள் சமுதாயத்தாரில் அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாகக் கருதாமல் இறந்து விடுபவர், சொர்க்கத்தில் நுழைவார்;.. அல்லது நரகம் புக மாட்டார்'... என்று ஜிப்ரீல்(அலை) அவர்கள் என்னிடம் கூறினார்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். நான், 'அவன் விபசாரம் புரிந்தாலும், திருடினாலுமா?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'ஆம்; அவன் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே!' என்று பதிலளித்தார்கள்.

ஸஹீஹ் புகாரி : 3222.

அத்தியாயம் : 59. படைப்பின் ஆரம்பம்

இதை நாம் ஆதாரமாக காட்டும் போது இஸ்லாமியர்கள் வழக்கமாக சொல்லும் ஒரு விஷயம் உண்டு .அது என்னவென்றால் அதாவது அவர்கள் செய்யும் பாவத்துக்கு



தக்க தண்டனை நரகத்தில் அனுபவித்த பிறகு சொர்க்கத்துக்கு போவார்கள் என்று.

ஆனால் அப்படி கிடையாது. மேலே உள்ள ஹதீஸிலேயே விளக்கமாக நகரம் புக மாட்டார் என்று இருக்கிறது. இதற்கு ஆதாரமாக ஒரு ஹதீஸை கூட பார்ப்போம்

அல்லாஹ்வின் தூதர் சொன்னார்கள்; மர்யமின் மகனாகிய ஈஸா அவர் மீது சாந்தி உண்டாகட்டும். ஒரு மனிதன் திருடுவதை கண்டார்கள். உடனே அவர் ; நீ திருடுகிறாயா ? என்று கேட்டார். அதற்கு அவன் ; இல்லை, அல்லாஹ்வை தவிர வேறு கடவுள் இல்லை என்று சொன்னான். அப்போது ஈஸா; நான் அல்லாஹ்வை நம்புகிறேன். எனது கண்களை நம்பவில்லை

Nasai Hadith 5427

இங்கே நீங்கள் பாருங்கள் ஒருவன் மனிதன் திருடும் போது அவன் கலீமா சொன்னால் அது திருட்டு கிடையாது.

இன்னும் அடுத்த ஹதீஸை பாருங்கள்

## *பாவங்களை மறைக்க சொல்லும் *அல்லாவின் போதனை*

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

என் சமுதாயத்தாரில் (பாவம் செய்த) அனைவரும் (இறைவனால்) மன்னிக்கப்படுவர்; (தம் பாவங்களைத்) தாமே பம்ரங்கப்படுத்துகிறவர்களைத் தவிர *ஒருவர் இரவில் ஒரு (பாவச்) செயல் புரிந்துவிட்டுப் பிறகு காலையானதும் அல்லாஹ் அவனுடைய பாவத்தை (பிறருக்குத் தெரியாமல்) மறைத்துவிட்டிருக்க, 'இன்னாரே! நேற்றிரவு நான் (பாவங்களில்) இன்னின்னதைச் செய்தேன்' என்று அவனே கூறுவது பம்ரங்கப்படுத்துவதில் அடங்கும். (அவன் செய்த பாவத்தை) இரவில் (பிறருக்குத் தெரியாமல்) இறைவன் மறைத்துவிட்டான்.* (ஆனால்,) இறைவன் மறைத்ததைக் காலையில் அந்த மனிதன் தானே வெளிச்சமாக்கி



விடுகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 6069.

அதாவது இரவில் சாதாரணமாக மனிதர்கள் செய்யும் இரண்டு முக்கியமான பாவங்கள் உண்டு. அதில் ஒன்று திருட்டு ,இன்னொன்று விபச்சாரம். இவைகளை செய்தாலும் அதை மறைத்து விடும் படி அல்லாஹ் சொல்கிறான் என்றால் யாரையும் காணாமல் அவ்வாறு செய்துகொள் என்று சொல்கிறதாக தானே அர்த்தம் ?

இதற்க்கு ஆகாரமாக இன்னொரு ஹதீஸையும் பாருங்கள்.

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் மதீனாவின் புறநகர்ப் பகுதியில் ஒரு பெண்ணிடம் தவறாக நடந்துகொண்டேன். அவளுடன் உடலுறவு கொள்வதைத் தவிர வேறு செயல்களைச் செய்துவிட்டேன். இதோ நான் (இங்கு தயாராக நிற்கிறேன்). என் விஷயத்தில் நீங்கள் நாடியதை நிறைவேற்றுங்கள்" என்று கூறினார்.

அவரிடம் உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வே உனது குற்றத்தை மறைத்துவிட்டிருக்க, நீ உன் குற்றத்தை மறைத்திருக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள். ஆனால், அந்த மனிதருக்கு நபி (ஸல்) அவர்கள் பதிலேதும் கூறவில்லை.

பிறகு அந்த மனிதர் எழுந்து சென்றுவிட்டார். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அவரை அழைத்துவர அவருக்குப் பின்னால் ஆளனுப்பினார்கள். அவரிடம், "பகலின் இரு ஓரங்களிலும் இரவின் சில பகுதிகளிலும் தொழுகையை நிலைநாட்டுவீராக! நன்மைகள் தீமைகளை அழித்துவிடும். இது படிப்பினை பெறுவோருக்கு ஒரு பாடமாகும்" (11:114)எனும் இந்த இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

அப்போது அங்கிருந்த மக்களில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! இது இவருக்கு மட்டும் உரியதா? (அல்லது அனைவருக்குமா?)" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இல்லை; மக்கள் அனைவருக்கும் உரியதுதான்" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் ஆறு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 5335.

அத்தியாயம் : 49. பாவமீட்சி

இங்கே முதலாவது உமர் சொல்கிறதை பாருங்கள்.. அதாவது அவன் ஒரு பெண்ணிடம் தவறாக நடந்து கொண்டதை அல்லாஹ்வே மறைத்து விட்டாராம். இதை உங்களால் ஏற்றுகொள்ள முடிகிறதா ? அதாவது அல்லாஹ் இப்படி பட்ட பாவங்களை செய்ய உடந்தையாக இருக்கிறார் என்று அர்த்தம். அதாவது ஒருவன் முஸ்லீமாக மாறி கலீமா சொல்லி விட்டு பாவங்களை கண்ட படி செய்யலாம்.

இன்னும் முடியவில்லை இன்னொரு ஹதீஸையும் பாருங்கள்

ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஒருவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் '(மறுமைநாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்குமிடையே நடக்கும்) இரகசிய உரையாடல் தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்ன செவியுற்றீர்கள்?' என்று வினவியதற்கு இப்னு உமர்(ரலி) கூறினார்: உங்களில் ஒருவர் தம் இறைவனை நெருங்குவார். இறைவன் தன்னுடைய திரையை அவரின் மீது கோட்டு (அவரை மறைத்து) விடுவான். பின்னர் (அவரிடம்) இறைவன் 'நீ (உலகத்தில்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?' என்று கேட்பான். அவர் 'ஆம்' என்பார். இறைவன் (மறுபடியும்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?' என்று கேட்பான். அப்போதும் அவர் 'ஆம்' என்று கூறி தம் குற்றத்தை ஒப்புக் கொள்வார்.

பிறகு 'நான் (உன் குற்றங்களை) உலகில் மற்றவருக்குத் தெரியாமல்) மறைத்தேன்; இன்று நான் அவற்றையெல்லாம் உனக்காக மன்னித்துவிடுகிறேன்' என்று சொல்வான்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. 155

ஸஹீஹ் புகாரி : 7514.

அத்தியாயம் : 97. ஓரிறைக் கோட்பாடு

பாருங்கள் பூமியில் கலிமா சொன்ன முஸ்லீம் செய்த பாவங்களை அல்லாஹ் அவனை மறுமை நாளில் ஒரு திரைக்குள் கொண்டு சென்று கேட்பானாம். அவனும் அதை ஒப்புக்கொள்ளும் போது நான் தான் அவைகளை மறைத்தேன். இன்று அவைகளை மன்னித்து விட்டேன் என்று சொல்லுவானாம். சிந்தித்து பாருங்கள் சகோதரர்களே உண்மையான இறைவன் இப்படி எல்லாம் செய்வானா ?

இத்துடன் முடியவில்லை,,,, இவ்வாறு முஸ்லீம்கள் செய்த பாவங்களை அல்லாஹ் மன்னிப்பது மட்டுமல்ல அந்த பாவங்களை அப்படியே யூத கிறிஸ்தவர்கள் மீது சுமத்தி விடுவானாம். அந்த ஹதீஸ்களையும் கீழே பார்ப்போம்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மறுமை நாளில் முஸ்லிம்களில் சிலர் மலைகளைப் போன்ற பாவங்களுடன் வருவார்கள். ஆனால், அவற்றை அவர்களுக்கு அல்லாஹ் மன்னித்துவிட்டு, யூதர்கள்மீதும் கிறித்தவர்கள் மீதும் அவற்றை வைத்துவிடுவான்.இவ்வாறே நான் கருதுகிறேன்.

இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூரவ்ஹ் ஹரமீ பின் உமாரா (ரஹ்) அவர்கள், "இவ்வாறே நான் கருதுகிறேன் எனும் ஐயப்பாட்டைத் தெரிவித்த அறிவிப்பாளர் யார் என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூறுகிறார்கள்.

அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்து இதைச் செவியுற்ற (அவர்களுடைய புதல்வரான) அபூபுர்தா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை நான் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது அவர்கள், "இதை நபி (ஸல்)

அவர்களிடமிருந்தா உம்முடைய தந்தை அறிவித்துள்ளார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "ஆம்" என்றேன்.

ஸஹீஹ் முஸ்லிம் : 5344.

அத்தியாயம் : 49. பாவமீட்சி

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில் ஒவ்வொரு முஸ்லிமிடமும் ஒரு யூதரையோ அல்லது கிறித்தவரையோ ஒப்படைத்து, "இவன்தான் உன்னை நரகத்திலிருந்து விடுவித்தான்" என்று சொல்வான்.

இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 5342.

அத்தியாயம் : 49. பாவமீட்சி

அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்), சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:

"ஒரு முஸ்லிமான மனிதர் இறக்கும்போது நரகத்தில் அவரது இடத்திற்கு யூதர் ஒருவரையோ கிறித்தவர் ஒருவரையோ அல்லாஹ் அனுப்பாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக (தம் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள் கூறினார்கள் என அபூபுர்தா (ரஹ்) அவர்கள் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தார்கள்.

அப்போது உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவனில்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீது சத்தியமாக! இதை உம்முடைய தந்தை (அபூமூசா (ரலி) அவர்கள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதாக உம்மிடம் கூறினார்களா?" என்று மூன்று முறை கேட்டார்கள். அபூபுர்தா (ரஹ்) அவர்கள், அவ்வாறே சத்தியமிட்டுக் கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் அபூபுர்தா (ரஹ்) அவர்களைச் சத்தியமிட்டுக் கூறச் சொன்னதாக சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் என்னிடம் அறிவிக்கவில்லை. ஆனால், அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அவ்வாறு அறிவித்தபோது, அதற்கு சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் மறுப்புத் தெரிவிக்கவில்லை.

- மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 5343.

அத்தியாயம் : 49. பாவமீட்சி